# பஞ்சாமிர்தம்
# மாலை 2, காசு 2
# வைகாசி 1925
# *[May / June 1925]*

Record no. 524

*Pañcāmirtam*

*Mālai 2, kācu 2*

*Vaikāci 1925*

*[May / June 1925]*

Record no. 524

# பஞ்சாமிர்தம்

ஒரு மாதாந்தரப் பத்திரிகை



நான் ஒரு மானுடன் : நான் மதியாதன
மானுட வாழ்வில் இலை.

மாலை - II வைகாசி — 1925 காசு - 2


## ஒரு விண்ணப்பம்





மலர் பல பெயரால் பணிபரம்பொருளே!
உலகில் ஓர் அணுவும் உனையலாவது
அசையாது
என்னும் உரைநினைந்து, உன்னை வேண்டுவல் இது :—
முன்னைநாள் இளமையும் முடிவிலா வாழ்வும்
உதவினை சிலர்க்கென ஓதுவர் ஒரு கதை :
இதமுற அவ்வரன் எனக்கு நீ உதவினும்
கொள்ளேன், தள்ளொணுச் சன்னையே கொடுக்குமால்;
‘செல்வமும் இன்பமும் செல்சினச் செருக்கும்
நல்கு’ என நயவேன் ; ‘நன்மைதீர் வறுமையும்,
பலப்பல இன்னலும் விலக்கு’ எனப் பணிகிலேன் :
“நன்றே வருகினும் தீதே விளைகினும்”
ஒன்றே என மதித்து ஏற்கும், என் உள்ளம் ;
வேண்டிலேன் சீர்த்தி : ஈண்டு அது நிகர்க்கும்
வறியபேய்த் தேர்என, அறிவேன் ; மற்று, யான்,
உன்னை இன்று இரப்பது என்னை எனின், கேள்: —
என்னின் எளியவர்க்கு என்னால் இயன்றதை,
மன்னும் என் அகஒளி காட்டும் வழியினில்,
உன்னி உழைக்க உகந்து அருள் ; அதன் பொருட்டு
இந்த என் உடலம், இருக்குநாள் மட்டும்
நொந்து நோவாது அருள் ; நோய் வருமாயினும்,
மனமும் அறிவும் மயங்கி விடாது அருள் ;
தினமும் இதுவே செய்யும் அவா அருள் ;
உடல்வலி ஒயுமேல், உளவலி சாயுமேல்,
உடனே உயிர் ஒழிந்து, உலக
நடன சாலையை நான் நழுவிட அருள்கவே !

—அமுதகவி





# பெண் கல்வி*

இந்திய ஊழியர் சங்கத்தின் தலைவர்

இராஜ மந்திராலோசனை அவயவம், கௌரவபூரண

ஸ்ரீ. V. S. ஸ்ரீநிவாச சாஸ்திரியார், சென்னை.



எனக்கு விவரந் தெரிந்த நாள்முதல், இத் தேசத்திலே ஒரு சாரார், 'பிள்ளைகளையும் பெண்களையும், வேறாக, அதாவது பிரத்தியேகமான இடங்களில், படிப்பிக்கவேண்டும் என்பது மாத்திரமல்ல; பிள்ளைகளின் கல்விமுறை பெண்களுக்கு ஏற்காது' என்று, வற்புறுத்திக் கூறிவருகின்றனர். இதன் காரணம், உலக வாழ்க்கையிலே ஆண்களின் பிறவிப் பேறு ஒன்று, பெண்களின் பிறவிப்பேறு வேறொன்று; அது அதற்கு ஏற்றபடி, வெவ்வேறு முறைகளில் அவர்களைக் கல்வி பயிற்றவேண்டும் என்பதே. புருஷரும் ஸ்திரீகளும் அடைதற்குரிய ஜன்மஸாபல்லியத்தை இவ்வண்ணம் வேறுபடுத்திப் பிரிப்பது சரியென்று எனக்குத் தோன்றவில்லை. உடற்கூற்றிலே ஆண்களுக்கும் பெண்களுக்கும் வெளிப்படையான பேதங்கள் இருப்பதும், அவற்றின் பலனாக வாழ்க்கையிலே அவர்கள் பிரவிருத்திகளும் கடமைகளும் ஒருவாறு வேறுபடுவதும், எல்லாரும் அறிந்த விஷயமே. ஆயினும், இருபாலார்க்கும் மானுஷிகம் பொது; அன்றியும் ஆண்களில் அநேகர் பெண்களுக்கே ஏற்றனவாக மதிக்கப்படும் வேலைகளையும், பெண்களில் அநேகர் ஆண்களுக்கே உரியனவாக கருதப்படும் கடமைகளையும், நன்கு செய்யத் தக்கவர்களாய் இருக்கின்றனர்; இதனால், பொதுவான கல்வி முறையை இருவரும் பயிலுவதே, காலாந்தரத்தில் நற்பயன் தருவதாகும்.

உலகம் எங்கும், சமுதாய வாழ்க்கையிலும் அதையொட்டிய பல தொழில்களிலும், ஆண் பெண் என்ற வித்தியாசமின்றி ஒன்றாய்ச் சேர்ந்து இருபாலாரும் உழைத்துவருவது, நாளுக்குநாள் அதிகரித்துவருகின்றது. இவ் விஷயத்தில் இந்து தேசம் வேறு

* இந்தக் கட்டுரை, "பஞ்சாமிர்தம்" பத்திரிகைக்கென்றே ஆங்கிலத்தில் வரையப்பட்டது; ரெவ். F. கிங்ஸ்பெரி அவர்கள் தயைசெய்து தமிழில் மொழிபெயர்த் துதவியது—ப-ர், ப-ம்.





சில தேசங்களுக்குப் பின்னிட்டிருந்தாலும், இங்குகூட, முன்னில்லாத வண்ணம் ஸ்திரீ புருஷர் என்ற வித்தியாசங் குறைந்து, இருபாலரும் ஒன்றுகூடிப் பல துறைகளிலே உழைத்து வருவதை அறியாதார் யார்? வேறு பல விஷயங்களிலே மற்ற நாட்டாரை நாம் பின்பற்றி மேற் செல்வதைப் போல, இவ்விஷயத்திலும், மேலும் மேலும் நாம் அவர்களைப் பின்பற்ற ஆயத்தமுள்ளவர்களாயிருக்கவேண்டும். நமது நாட்டு ஜன நாயகர்களில் சிறந்தவர் சிலரும், கண்களை மூடிக்கொண்டு, தங்களைத் தாங்களே வெகுலகுவில் ஏமாற்றிக்கொள்ளும் நிலையிலிருப்பதைக் காணுந்தோறும், "குட்டிச் சுவரில் முட்டிக்கொள்வதற்குமா வெள்ளெழுத்து?"



ஸ்ரீ. V.S. ஸ்ரீநிவாச சாஸ்திரியார், P. C.

என்று ஆச்சரியப்படுகிறேன். சமுதாய நிலைமையும், தேசத்தின் பொருள் வரும்படி நிலைமையும் தங்கள் கொள்கைக்கு முழுதும் விரோதமாயிருந்தும், தாங்கள் சரியென்று நினைப்பது எதுவோ அது வந்தேதீரும் என்று, அவர்களுக்குத் தோன்றுகிறது. நான் இப்பொழுது கடைசியாய்ச் சொன்னது, நமது தேசத்தார் பிறர் மற்றவர் என்று பொருள்படக் கூடியதாகையால், என் அருத்தத்தை ஒரு திருஷ்டாந்தத்தினாற் காட்டுவேன்: ஒரே இடத்தில் இரண்டு சிறுமியர் பாடசாலைகள் உண்டென்று வைத்துக் கொள்வோம். அவைகளில் ஒன்று, பெண்களுக்குப் புகட்டப்படவேண்டிய கல்வி பிரத்தியேகமானது என்ற பழைய எண்ணத்தை அனுசரித்து நடத்தப்படுகிறது. மற்றது சிறுவருக்குப் போலவே சிறுமியருக்கும் என்ற தற்காலக் கொள்கைக் கிணங்க

நடத்தப்படுகிறது. இவ்விரண்டினுள், பிந்தியதற்கே அனேக பெண்கள் போய்க் கற்றுவருவதையும், அதுவே செழித்தோங்கு வதையும் காண்போம். ஏன்? பெண்களின் கல்விப் பயிற்சியை நிருணயிக்கும் தாய்மார்கள், தங்கள் பிள்ளைகளைப் போலவேபெண் களும் கற்றுத் தேறவேண்டும் என்று ஆசைப்படுகின்றனர். இந்த இயற்கைப் புத்தி, ஆரோக்கிய வாழ்வுக்கேற்ற நற்குறியேயாம்.

இங்கிலாந்து தேசத்திலே, ஒரு தலைமுறைக்கு முன்னே, பெண் கல்வியைக் குறித்துப் பற்பல கொள்கைகளிருந்தன. இவை யெல்லாம் ஒன்றோடொன்று பொருந்தாதவை. நெடுநாள் ஆற அமர ஆலோசித்தபின், இக் கொள்கைகளைவிட்டு, புருஷரைப் போலவே ஸ்திரீகளும் சுதந்திரராயிருக்கப் படிப்பிக்கவேண்டும் என்று தீர்மானித்தனர்; முடிவில் இதுவே நிலைத்தது. இதன் படி, ஸ்திரீகள் தங்கள் ஜீவனார்த்தத்துக்காக வேறொருவரைச் சார்ந்திருக்கவேண்டியதில்லை; எவ்விதத்திலும் தங்களைத் தாங் கள் காத்துக்கொள்ளப் பழகுகிறார்கள். சில வருஷங்களுக்கு முன்னே சென்னையில் பெண்களுக்கென்று ஸ்தாபிக்கப்பட்ட உயர் தரக் கலாசாலைகள் மூன்றிலும், பல நூற்றுவர் ஆவலோடு சென்று கற்பதே இதற்குப் போதிய சாக்ஷியாகும்.

பழைய கொள்கையினர், இக் கலாசாலைகளுக்கருகே, தங்கள் மனப்படியான பள்ளிக்கூடம் கலாசாலைகளை ஸ்தாபிக்கட்டும். இவைகளிலே, கீழ்ப்படிதலுள்ள மனைவிகளுக்குரிய இலக்ஷணங் கள், பாக சாஸ்திரம், சங்கீதம் முதலியன படிப்பிக்கட்டும்.* இவர்கள் பள்ளிக்கூடங்களுக்கு எத்தனை பெண்கள் வருவார்களோ என்று பார்ப்போம். இவ் விஷயத்தில், புனா நகரத்துக் கார்வே பட்டாச்சாரியாரைவிட அறிந்தவர்கள் ஒருவரும் இரார். இவர் சில வருஷங்களுக்கு முன்னே, அறிவும் அநுபவமுமிக்க பலருடன் தீர்க்காலோசனை செய்து, பெண்களுக்குப் பிரத்தியேகக் கல்வி கற்பிக்க, பெண்கள் சர்வகலாசாலை யொன்று ஸ்தாபித்தார். இதற் குப் பொருளுதவியும் ஏற்றபடி வருகிறது. ஆயினும், புனாவி லுள்ள பெண்கள் கலாசாலையில் இப்பொழுது படிக்கும் பெண்கள் மொத்தம் 20-பேர் தான்; அதே புனா நகரிலே, ஆண்களுக்குரிய பெருகுசன் கல்லூரி (Ferguson College) யிலே மட்டும், ஆண் கள் வகுப்புக்களிலே சேர்ந்து 45-பெண்கள் கல்வி கற்கின்றனர். பம்பாய் இராஜதானியில், ஆண் மக்கள் கலாசாலைகளிற் படிக்கும் பெண்கள் எல்லாரையும் கணக்கிடின், இத்தொகை மிகப் பெரிதாகி

* "அடிசிற்கு இனியாளே, அன்புடையாளே, படிசொல் தவறாத பாவாய்—அடிவருடிப்—பின்தூங்கி முன் எழுந்த பேதையே" போதி யோ!—என் தூங்கும் என் கண் இரா? என்னும் வெண்பா, நம்மவர் பழைய கொள்கைகளை நன்குவிளக்கும்.—ப ர், ப ம்,



விடும். ஒருவேளை, பம்பாய் இராஜதானி வேறு, சென்னை இராஜ தானி வேறு என்பார் சிலர். இப்படிப் பேசுவது வியர்த்தம். சிற்சில கூட்டத்தார், இங்கும் அங்கும், தங்கள் தங்கள் மனம் போலக் காரியங்களை நடத்த முயலுவதை நான் தடைசெய்ய வில்லை. ஆயின், தேசத்தின் பொது நன்மைக் கென்று கல்வி யைப் பற்றிப் பேசவருவோர், காலத்தின் குறிகளைக் கவனியா திருப்பது சரியல்ல. இப்படிச் செய்வது, மகாத்துமா காந்தி, காலத்தின் கோலத்தைச் சிறிதும் கவனியாமல், "கதர் அணியுங் கள்; சக்கரத்திலே நூல் நூலுங்கள்" என்று வற்புறுத்துவது போலாகும். நாம் ஒவ்வொருவரும் கவனிக்கவேண்டியது யாதெ னில், 'நாம் மனதிலே புதிதாக நிருமிக்கும் உலகம் இப்படி இப்படி நடக்கவேண்டும் என்று மனப்பால் குடிக்கலாம்; ஆனால், நாம் வாழும் இவ்வுலகமோ, தொன்றுதொட்டுப் பல சத்துவங்களால் தாக்கப்பட்டு, விலகமுடியாத சில சுவடுகளின் வழியே நடந்தேறு கிறது. அதற்கிசைய நாம் நமது யோசனைகளை யோசித்துக் காரியங்களை நடத்தவேண்டுமே யன்றி, கிழக்கில் உதிக்கும் சூரி யனை மேற்கில் உதிக்கப் பண்ண நம்மால் ஆகாது' என்பதே. புருஷனுக்குப் பணிப்பெண்ணாக, உதவியாக, ஸ்திரீ இருக்கவேண் டும் என்னும் பழைய ஏற்பாடு போய்விட்டது. புருஷனுக்காக ஸ்திரீ உண்டாக்கப்படவில்லை. புருஷனுக்குப் போலவே ஸ்திரீக் கும் ஆத்துமா உண்டு. அவள் தன் ஈடேற்றத்துக்கு அநுகூல மானவைகள் எவைகளோ அவைகளை நாடுவாள். விவாகம் பண் ணிப் பிள்ளைகளைப் பெறுவதே பெண்களின் ஒரே கடமையாயிருந் தாலும், அப்பொழுதும் புருஷரைப் போலவே ஸ்திரீகளும் பயிற்று விக்கப்படவேண்டும். ஆனால், இந்தியாவிற்கூட, பழைய எண்ணங் கள் போய், ஸ்திரீகளுக்கு நல்ல காலம் பிறந்து, வாழ்க்கை விரிந்து கொண்டு வருகிறது. அவர்கள் தங்களுக்கு அநுகூலமானபடி நடக்கவும்; இஷ்டமானால், விவாகம் செய்யாமல், தாங்கள் பர தந்திரராய் இராமல், சுதந்திரராய்க் காரியங்களை நடத்திக்கொள்ள வும், கூடும். புருஷர்கள் மேலானவர், ஸ்திரீகள் கீழானவர்கள் என்ற எண்ணம் இனி நில்லாது; அவ்வெண்ணத்தை நிலைநிறுத்த முயல்வது வீண். இப்பொழுது புருஷர்களைப் போலவே ஸ்திரீ களும் 'வோட்' கொடுக்கும் உரிமை கிடைத்துவிட்டது. இன் னும் சில வருஷங்களில், ஆலோசனைச் சங்கங்களிலே ஸ்திரீகளும் அவயவங்க ளாகலாம் என்னும் சுதந்திரம் கிடைக்கும் என்பது மெய். பள்ளிக்கூடக் கமிற்றிகளிலும், ஜன சமூக சேவைகளி லும், வேறு பல துறைகளிலும், ஸ்திரீகளையும் மேலும் மேலும் சேர்த்துக்கொண்டு காரியங்களை நடத்திவருகிறோம். இன்னும் சிறிது காலத்திலே, உத்தியோகத் துறைகளிலும் ஸ்திரீகளைக்

காணலாம். "உங்களுக்கு இங்கே இடமில்லை" யென்று சொல்ல யாரால் முடியும்? "இவர்கள் இங்கேயும் வந்துவிட்டார்களே" என்று மனதிலே பழைய கருநாடகர்கள் எண்ணிப் பெருமூச் செறிந்தாலும், வாய்விட்டுச் சொல்லத் துணியமாட்டார்கள். பெண்களும் (புருஷர்களைப் போலவே) நன்கு கல்லாவிட்டால், தேச விருத்திக்குத் தடையாகவே யிருப்பார்கள். தேசத்தின் பொது நன்மையைக் கவனித்தாலும், ஸ்திரீகளுக்குத் தனித்தனியே நாம் செய்யவேண்டிய கடமைகளைக் கவனித்தாலும், சிறுவர்களுக்கு நாம் பயிற்றும் கல்வியையே சிறுமியர்களுக்கும் பயிற்றவேண்டும் என்பது, உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்குகிறது.



# சென்னைச் சட்ட சபை

சென்னைச் சட்ட சபையின் காரியதரிசி
ராவ் பகதூர் ஸ்ரீ. R. V. கிருஷ்ணையர், B.A., B.L., சென்னை

## I. சட்ட சபையின் சரித்திரம்.



ந் நாட்டில் இப்பொழுது எங்கும் "சுயராஜ்ய" கோஷம் நிரம்பியிருக்கிறது. "சுயராஜ்யம்" என்றால், தங்களைத் தாங்களே ஆளுதல் என்று பொருள். இந்தியாவின் ஜனத்தொகை சுமார் 32 கோடியாக விருக்க, இந்தியர்கள், தங்களைத் தாங்களே ஆளுதல் எப்படி? இங்கிலாந்து முதலிய மேனாடுகளில் ஜனங்கள் சுயராஜ்யம் செலுத்துவது எப்படி யென்றால், தங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அடங்கிய சட்ட சபைகள் மூலமாக என்று சொல்லலாம். சுயராஜ்யம் அடைந்த தேசத்தில், சட்ட சபையின் அனுமதியின்றி, இராசாங்கத்தார் வரிகள் விதிக்க முடியாது. வசூலித்த வரிகளைச் செலவு செய்ய முடியாது; அதன் இஷ்டத்திற்கு விரோதமாக, சட்டங்கள் பிரசுரிக்க முடியாது; உத்தியோகஸ்தர்கள் நடவடிக்கைகள் அனைத்தும் அதன் பரிசோதனைக்குட்படும்; அதன் ஆதரவின்றி நிர்வாக சங்கத்தினராவது, மந்திரிகளாவது, தங்கள் பதவியை வகித்திருக்க முடியாது; அதன் நம்பிக்கையை இழந்த போது, அதன் ஆதரவுபெற்ற வேறு மந்திரிகளுக்குத் தங்கள் ஸ்தானத்தைச் காலி செய்து கொடுத்துவிட வேண்டியிருக்கும். இந்த மாதிரி சட்ட சபையின் மூலமாகச் செலுத்தும் பொது ஜனங்களின் அதிகாரத்திற்கே சுயராஜ்யம் என்று பெயர். ஆகையால், சுயராஜ்ய அரசியலில், சட்ட சபையே முக்கியமான அம்சமாகும்.



2. தற்காலம் நமது இராஜதானியில் ஒரு சட்ட சபை யிருக்கிறது. 1919 ௵த்தில் அதை ஏற்படுத்தியபோது, நமது மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியாரே, பொறுப்பாசாட்சிக்குச் செல்லும் பாட்டையில் அந்தச் சபை ஒரு மைல்கல் என்று சொல்லி யருளினர்.

3. பிரிட்டிஷ் இராஜாங்கம் இவ்விந்தியா தேசத்தில் நிலை பெற்றுச் சுமார் நூற்றெழுபது ஆண்டுகளாயின. முதல் அறுபத்தி ஞன்கு வருஷங்களாக, அதாவது 1861௵ வரையில், இந்த இராஜதானியில் சட்ட சபை யென்றே யொன்றில்லை. 1833-௵ வரையில், சென்னை கவர்ன்மெண்டாரே, அதாவது, சென்னை கவர்னரும் அவருக்கு உதவி புரியும் நிர்வாக சபையாருமே, தங்களுக்கு யுக்தமான சட்டங்களைத் தங்கள் ஸ்தானத்திலிருந்து பிரேரேபித்து, அவைகளை ஜனங்கள் கீழ்ப்படியும்படியாக வற்புறுத்தி வந்தார்கள். 1833-ம் வருஷத்தில், இந்த அதிகாரம்கூட, பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் ஒரு சட்ட மூலமாக, இவர்களிடமிருந்து எடுக்கப்பட்டது. அது முதல், 1861-ம் வருஷம் வரையில், சென்னை முதலான எல்லா இராஜாதானிகளுக்கும், அப்போது கல்கத்தாவி லிருந்த இந்தியா கவர்ன்மெண்டாரே சட்டங்கள் செய்து வந்தார்கள். அப்படிச் செய்வதில், 1853௵ முதல் 1861௵ வரையில், ஒவ்வொரு இராஜதானியிலுமிருந்து, அந்த இராஜதானிக்குப் பிரதிநிதியாக ஒரு மெம்பர், இந்தியா சட்ட சபைக்கு அனுப்பப்பட்டு வந்தார். இவ்வித ஏற்பாட்டினால், இராஜதானிகள் திருப்திபடையாததுடன், இந்தியா கவர்ன்மெண்டினும் வேலை யதிகரித்தது. ஆதலால், 1861-ம் வருஷத்தில், இராஜதானிகளில் சட்ட சபைகள் முதல் முதல் ஏற்படுத்தப்பட்டன. இதுதான் சென்னைச் சட்ட சபையின் ஆரம்பம்.

4. 1861-ம் வருஷம் முதற்கொண்டு நாளிது வரையில், சென்னைச் சட்ட சபையின் வாழ்க்கை வரலாற்றை நான்கு பருவங்களாகப் பிரிக்கலாம். அவை யாவன:—(I) 1861-ம் வருஷம் முதல் 1892-ம் வருஷம் வரையில்; (II) 1892 முதல் 1909 வரை; (III) 1909 முதல் 1919 வரை; (IV) 1919 முதல் நாளிது வரையில்.

5. முதற் பருவம் (1861-1892)—1833-ம் வருஷத்திற்கு முந்தி, இராஜாங்கத்திற்குத் தேவை யென்று தங்களுக்குத் தோன்

றின சட்டங்களை, இவ்விராஜதானிக் கவர்னரும், அவரைச் சேர்ந்த நிர்வாக சபை மெம்பர்களுமே, இயற்றி வந்தனரென்று சொன்னேமல்லவா? 1861-ம் வருஷத்தில் ஏற்பட்ட மாறுதல் என்னவென்ருல்.—சட்ட நிருமாண சமயங்களில், ஆலோசனைக்காகவும் உதவிக்காகவும், கவர்னர், தன்னுடைய நிர்வாக சபைக்கு, அச் சபையின் அங்கத்தினரல்லாத சில மெம்பர்களை நியமித்து, அவர்களால் பெருக்கப்பட்ட அச் சபையைக்கொண்டு, தனக்குத் தேவையான சட்டங்களை யியற்றலாம் என்பதே. 1833-ம் வருஷம் வரையில், கவர்னரின் நிர்வாக சபையே சட்ட சபை. 1861-ம் முதற்கொண்டு 1892-ம் வருஷம் வரையில் அந் நிர்வாக சபையாரும், சட்ட நிருமாணத்தில் உதவிக்காகக் கவர்னரால் நியமிக்கப்பட்ட அட்வோகெட் ஜெனரலும், சில கூட்டு மெம்பர்களும் (Additional Members) சேர்ந்த ஒரு கமிற்றியே சட்ட சபை. அப்படி நியமிக்கப் படுபவர்களின் தொகை, எட்டுக்கு மேற்படக்கூடாது. அச் சட்ட சபையில் ஒருவராவது ஜனங்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவரல்லர்; எல்லோரும் கவர்னரால் நியமிக்கப்பட்டு, அக் காரணத்தால் சர்க்கார் கட்சியைச் சேர்ந்தவர்களென்றே சொல்லத் தக்கவர்களாயிருந்தார்கள். அவர்களுக்குச் சட்டங்களியற்றும் விஷயம் ஒன்றைத் தவிர, வேறு இராஜாங்க விஷயம் எதிலும் யாதொரு சம்மந்தமு மிருந்த தில்லை. ஜனங்களின் குறைகளைப் பற்றி முறையிடவாவது, தங்கள் அபிப்பிராயங்களைத் தீர்மானங்கள் மூலமாய்ப் பிரேரேபிக்கவாவது, வரவு செலவு திட்டத்தைப் பரிசோதிக்கவாவது, அவர்களுக்கு அதிகார மில்லை. துரைத்தனத்தாருக்கு வேண்டுமான சட்டங்களைப் பகிரங்கமாய்ப் பதிவு செய்ய மாத்திரம், அவர்களுக்கு அதிகாரமிருந்தது.

6. இரண்டாம் பருவம் (1892-1909)—தேசத்தில் இங்கிலீஷ் கல்வியும் சுதந்திர ஞானமும் பரவி வந்தமையால், இப் பயனற்ற சிறிய சட்ட சபை வெகு காலம் நிலைநிற்க முடிய வில்லை. 1892-ம் வருஷத்தில் இதற்குப் பதிலாக ஒரு புதிய சட்ட சபை யேற்படுத்தப்பட்டது. ஏற்கெனவே யிருந்த சட்டசபை போலவே, இதுவும் அட்வோகேட் ஜெனரலும் கூட்டு மெம்பர்களும் சேர்ந்த நிர்வாக சபையாகவே இருந்தது. ஆயினும்;—

(1) 1861 ஷூத்திய சட்ட சபையில் 8 கூட்டு மெம்பர்கள் தானிருந்தார்கள். 1892 ஷூத்திய சட்ட சபையிலோ, 20 கூட்டு மெம்பர்கள் இருக்கக்கூடும். அதாவது, புதிய சட்ட சபை, முன்னிருந்ததைக் காட்டிலும் பெரிதாயிருந்தது.

(2) இரண்டு சபையிலும் கூட்டு மெம்பர்கள் கவர்னரால் நியமிக்கப்பட்டவர்களே யானுலும், 1892-ம் ஷூத்திய சட்ட சபையிலிருந்த இருபது கூட்டு மெம்பர்களில், ஏழு மெம்பர்கள்



முனிசிபாலிட்டிகள், லோகல் போர்டுகள், சர்வ கலாசாலை முதலான சங்கங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு, கவர்னரின் நியமனத்திற்கு அருகரெனச் சிபார்சு செய்யப்பட்டு, அச் சிபார்சின் பேரில் நியமிக்கப்பட்டவர்களா யிருந்தார்கள். "தேர்ந்தெடுத்தல்" என்னும் வழக்கம், இவ்வாறு ஆரம்பித்தது.

(3) 1861 ஷூத்திய சட்ட சபைக்கு, சட்ட நிருமாணத்தில் உதவிபுரிய மாத்திரம் அதிகாரமிருந்ததே தவிர, வேறு யாதொரு அதிகாரமு மில்லை. 1892-ம் ஷூத்திய சட்ட சபைக்கோ, அவ் வதிகாரத்துடன், இராஜாங்க விஷயமான சமாசாரங்களைப் பற்றியும் குற்றங் குறைகளைப் பற்றியும் கேள்விகள் கேட்டுப் பதில் பெறவும், இராஜாங்க வருஷவாரி வரவு செலவு திட்டத்தைப் பற்றிப் பேசவும் அதிகாரமிருந்தது. ஆனல் எந்த விஷயத்தைப் பற்றியும் சட்ட சபையின் கூட்டபிப்பிராயத்தைத் தீர்மானங்கள் மூலமாய்த் தெரிவிக்க அதற்கு அதிகார மில்லை.

7. மூன்றும் பருவம் (1909–1919) 1892-ம் ஷூத்திய சட்ட சபை பதினேழு வருஷங்களிருந்தது. அப்பதினேழு வருஷங்களில், கல்வியும், தேச பக்தியும், சுதந்திர விருப்பமும், இத் தேசத்தில் முன்னிலும் பதின் மடங்கு அதிகரித்தது. ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் சட்ட சபையில் தெரிவிக்கும் அபிப்பிராயங்களை யனுசரித்தே அரசன் அரசுபுரிய வேண்டும் என்னும் கிளர்ச்சி, கன்னியா குமரி முதல் இமயமலை வரையில் பலத்துவிட்டது. 1906 ஷூத்தில் கல்கத்தா நகரத்தில் நடந்த காங்கிரஸ் மகா சபையில், அச்சபைத் தலைவரான தாதாபாய் நௌரோஜி என்பவர், இந்தியாவின் கருத்தை ஓரே வார்த்தையிலடக்கி, இந்தியாவின் முன்னேக்கம் சுயராஜ்ய மென்று விளம்பரஞ் செய்தார். அத் தருணம் இங்கிலாந்து தேசத்தில் லிபரல் (Liberal) கக்ஷியார் அதிகாரத்திலிருந்தார்கள். மேலும், சுதந்திர நூல்களனைத்துங் கற்றவரும், சுதந்திர மந்திரத்தில் ஊன்றி யாழ்ந்த நம்பிக்கை யுள்ளவரும், தான் மதித்த கருமத்தைச் சாதிக்க வல்லவருமான Mr. Morley யென்பவர் இந்தியா மந்திரியாக விருந்தார். அவரும், இத் தேசத்தில் கவர்னர் ஜெனரலாக விருந்த மின்டோ பிரபுவும், இத்தேச இராசாங்க முறையில் சீர் திருத்தங்கள் தேவை யென்றுணர்ந்து, 1909 வருஷத்தில் பின் வரும் மாறுபாடுகளை யியற்றினர்:—

(1) சட்ட சபையின் மெம்பர்களின் தொகை முன்னிலும் மிகவும் அதிகரிக்கப்பட்டது. கவர்னரின் நிர்வாக சபையோரும் அட்வோகெட் ஜெனரலும் நீங்கலாக முன்னிருந்த மெம்பர்களின் தொகை 20; இப்போது 42.

(2) இந் நாற்பத்திரண்டு மெம்பர்களில், 19 பேர்கள் அநேக சங்கங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களை வேண்டாமென்று மறுதலிக்கக் கவர்னருக் கதிகார மில்லை. தேர்ந்தெடுக்கப்பட்ட காரணத்தினாலேயே, கவர்னரின் நியமனமின்றி, அவர்களுக்குச் சட்ட சபையில் வீற்றிருக்க அதிகாரமிருந்தது. தேர்ந்தெடுத்தல் என்னும் கொள்கை, இதனால் அங்கீகரிக்கப்பட்டது. ஆனால் பொது ஜனங்களை நேராகத் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கவில்லை அவர்கள் பிரதிநிதிக ளடங்கிய சங்கங்கள்தான் இன்னும் அப்படிச் செய்யலாயின.

(3) சட்ட சபையில் முகம்மதியர்களுக்குப் பிரத்தியேகமாய் ஸ்தானங்கள் ஏற்படுத்தப்பட்டன. இதனால் சட்ட சபையில் வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் (communal representation) பகிரங்கமாய் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

(4) சட்ட சபையில் பெரும்பான்மையோர் (majority) உத்தியோகப் பற்றில்லாதவர்கள் (non - official majority).

(5) இராஜதானியின் வருஷவாரி உத்தேச வரவு செலவு திட்டத்தைப் பரிசோதித்து, அதன் விஷயமாய்ச் சட்ட சபையின் தீர்மானத்தைப் பிரேரேபிக்க அதிகாரம் கொடுக்கப்பட்டது.

(6) இதுவும் தவிர, துரைத்தன சம்மந்தமான முக்கிய விஷயங்களைக் குறித்துக் கேள்விகள் கேட்கவும், அவைகளுக்குப் பதில் திருப்திகரமாயில்லா விட்டால் மறுபடி கேள்விகள் கேட்கவும், பொது விஷயங்களைக் குறித்துத் தீர்மானங்கள் பிரேரேபிக்கவும், சட்ட சபைக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது.

8. மேற்சொன்ன காரணங்களால் 1909 ஹூத்திய சட்ட சபைக்கு முன்னிருந்த சட்ட சபையைக் காட்டிலும் மேலான அதிகாரமும் பலமும் இருந்த தென்று சொல்லாமலே விளங்கும். தேசபக்த சிரோமணியாகிய கோகலேயென்பவர், 1909 ஹூத்திய சீர்திருத்தங்கள் தக்கவை யென்றும் தாராளமானவை யென்றும், (fair and generous) அவைகள் பொது ஜனத்தலைவர்களுக்குச் சர்க்காருடன் பொறுப்போடு ஒத்துழைக்க (Responsible association) வசதிகள் ஏற்படுத்தின வென்றும் சந்தோஷித்தார்.

ஆயினும், சுமார் பத்து வருஷத்திற்குள்ளாக, அச்சீர் திருத்தங்களை மாற்றும்படி நேரிட்டது. அச் சீர்திருத்தங்களால் சர்க்கார் நடவடிக்கைகளில் தப்புக் கண்டுபிடித்து, அத் தப்புக்களை கவர்ன்மெண்டாருக்குத் தெரியப்படுத்துவது சாத்தியமாயிற்றே யொழிய, அத் தப்புக்களை நிவர்த்தி செய்வதற்காவது, அத் தப்புக்க ளன்றி அரசாளக் கூடிய மந்திரிகளை நியமிக்கவாவது சட்ட சபைக்கு அதிகார மில்லாமலிருந்தது. முக்கியமாய் சர்க்கார் பணஞ் செலவுசெய்யும் விஷயத்தில், அதன் தீர்மானத்திற்குக் கிஞ்



சித்தாகிலும் கட்டுப்படுத்தும் யோக்கியதை இல்லாமலிருந்தது. வெளிப்படையான நடவடிக்கைகளிலும் ஆடம்பரக்களிலும் இச் சட்டசபை இங்கிலாந்திலுள்ள பார்லிமென்டை யொத்திருந்த போதிலும், அதன் முக்கிய அதிகாரங்க ளொன்று மின்றி, பயனற்றிருந்தது. பூர்வ ராஜாக்களுடைய தர்பாருக்கும், இந்தச் சட்ட சபைக்கும் வித்தியாச மில்லை யென்று அநேகர் சொல்ல வாரம்பித்தார்கள். அதிகாரமும் பொறுப்புமில்லாத சட்டசபை எப்படி திருப்திகரமாய் வேலை செய்யக் கூடும்? சட்ட சபை ஏற்பட்ட சில வருஷங்களுக்குள்ளாக, சுயராஜ்யம் வேண்டுமென்ற தீவிரமான கிளர்ச்சி எங்கே பார்த்தாலும் ஆரம்பித்துவிட்டது. இப்படி யிருக்க, 1914 ஹூத்தில் ஐரோப்பா கண்டத்தில் அகோரமான போர் ஆரம்பித்தது. அப்போரின் காரணங்கள் எப்படி யிருந்தபோதிலும், இங்கிலாந்திலும் அத்துடன் ஒத்துமையாயிருந்த இதர தேசங்களிலும், அது, கீழ்ப்பட்ட தேசங்களுக்குச் சுதந்திரம் கொடுப்பதற்கென்றும், இப்பார் முழுதும், சுய ஆட்சியை ஸ்தாபனஞ் செய்வதற்கென்றும், ஜனங்கள் சொல்லி வந்தார்கள். அமெரிக்காவில் ஐக்கிய மாகாணங்களின் தலைவரான Woodrow Wilson என்னும் மகான், எந் நாட்டிலுள்ளவர்களும் அவரவர்களே தங்களுக்கு வேண்டிய அரசியல் முறையை வகுத்துக்கொள்ள உரிமையுடையவர்கள் என்ற கொள்கையை வற்புறுத்தலானார். அக்கினியில் நெய் வார்த்தாற்போல், இவைகள் இந்தியாவிலுள்ள கிளர்ச்சியை யதிகரித்தன. இது நிற்க, யுத்தத்திற்கு இந்தியாவிலிருந்து ஏராளமான வீரர்களும், செல்வமும், உணவும், மற்றச் சாதனங்களும் செல்லா நின்றன. சமயத்தில் செய்த பேருதவிக்கு இங்கிலாந்து தகுந்த கைம்மாறு செய்ய அட்டி சொல்லக் கூடவில்லை. இப்பேர்ப்பட்ட சமயத்தில், மார்லியின் சிஷ்யரும், இந்தியர்களிடத்தில் அளவிலா அன்பு கொண்டவருமான மான்டேகு துரையவர்களும் இந்திய மந்திரியாக விருந்தார். அவர் நேரில் இந்தியாவிற்கு வந்து, கவர்னர் ஜெனரலாகிய செம்ஸ்போர்டு துரையவர்களுடன் கலந்து, இருவரும் தேசத்தலைவர்களிற் பலரை, விசாரித்து, பிற்பாடு 1918-ம் வருஷம் ஏப்ரல் மாதத்தில் ஒரு ரிபோர்ட்டு எழுதி, இங்கிலீஷ் துரைத்தனத்தாருக்கு அனுப்பினார்கள். இந்தியர்களுக்கு நாளடைவில் சுயராஜ்யம் கொடுத்துவிட வேண்டும் என்றும், அதற் கத்தாட்சியாக உடனே அவர்களுக்குத் துரைத்தன விஷயத்தில் பொறுப்பு ஏற்படுத்தி, தகுந்த விதமாய்ச் சட்ட சபையை மாற்ற வேண்டுமென்றும், அந்த ரிபோர்ட்டின் முக்கிய சிபார்சு. அந்தச் சிபார்சை யனுசரித்து, 1919 ஹூத்தில் பார்லியமெண்டில் ஒரு மசோதா இயற்றப்பட்டது. இப்போது இருக்கும் சட்டசபை, அம் மசோதாவினால் ஏற்படுத்தப் பட்டதுதான்.

9. இந்தச் சட்ட சபையின் அமைப்பையும், அதிகாரங்களையும், இது எவ்வளவு தூரம் நம்மை சுயராஜ்யத்திற்குக் கொண்டு போய் விடும் என்பதையும் பின் வரும் சந்தாக்களில் விசாரிப்போம்.

(தொடரும்)



## சுயராஜ்ய பஞ்சாயத்து

இந்தியா என்னும் ஐந்தலை நாகம்
சுயாதீனம் பெறச் சூழ்ந்திடும்
யந்திர தந்திர பந்திர விந்தைகள்

க. ஒளிமிகு பெருந்தலை உகந்த தில்லேனு.

(1) பஞ்சுவெட்டிப் பருத்திவெட்டி—சருக்காவில்
நூலை நூலும்—கைத் தறியில்-வேலை செய்யும்-கதர் வேட்டி,
சேலை நெய்யும்—பாழாம்
தீண்டாமை வேண்டாம் இங்கே—தில்லலே.

(2) இந்துக்களும் முஸ்லீம்களும்—இந்தியாவில்,
பேதம் இன்றி—பசு, மேள—வாதம் இன்றி—கசிவாக,
சோதரர் போல்—கூடின்,
சுயராஜ்யம் கூடும், இங்கே—தில்லலே.

உ. தேசதாசத் தலை பேசிடும் வாசகம்.

"சுயராஜ்யம் என்றால்,—முதலாவது, இந்தியாவிலே பல் வேறு பின்னங்களாய்க் காணும் கூட்டத்தார் எல்லாரையும் ஒன்று சேர்த்துப் பலப்படுத்தி, ஓர் இந்திய ஜன சமூகமாக்கும் முயற்சியில், யதேச்சைப்படி உழைக்கும் சுதந்திரமாகும்; இரண்டாவது, இந்த வேலையைச் செய்வதில், ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் நாம் இருந்த நிலைமையைக் கவனியாமல், நமது மனோசக்திக்கும் மனப் பான்மைக்கும் இசைவாக, தேசிய வழிகளில் முன்னேற்றம் அடையும் சுதந்திரமாகும்."



ங. மிதவாதத் தலை கோட்டிடும் கும்மி.

(1) ஆங்கிலர் சீலம் நியாயம் சுதந்திர
ஆசை பெருகிய ஆன்றோரடி—(அவர்)
தாங்கியே நம்மைத் தயாராகச் செய்தபின்
நம் உரிமைகள் தருவாரடி.

(2) ஆக்கப் பொறுத்தவள், ஆறப் பொறுமலே,
ஆத்திரப் பட்டுநீ ஆடாதேடி ;—(இந்த)
ஏக்கம் ஏன்? இன்னும் இரண்டோர் யுகங்களில்
இந்திய சுயராஜ்யம் எய்துமடி.

ச. ஆசிரியத் தலை சீறிடும் சிந்து.

இந்தியர் சகோதரர் என்றும்—இனி
அந்தணரும் மற்றவரும் பந்துவே என்றும்,
சாதிமத பேதம் ஒழிந்து—புது
நீதியெனப் பந்தியினில் நீங்கள் புசித்தால்,
பட்டினி இருந்து படுவேன்!—என்னை
வெட்டி வெட்டி வீழ்த்தினும்மே இதற்கிசையேன்!
இந்தியசுய ராச்சியம் எல்லாம்—இனிச்
சொந்தமாகும் சூழ்ச்சி ஒன்று சொல்கிறேன் கேளும்:—
ஆதிவரு ஞசிரமங்கள்,—மறை
ஓதுமுறை களின்படி ஒழுகுவீரேல்,—
அம்முறைகள் நானே அறிவேன்,—அவை
செம்முறைகள் என்பதற்குத் திரேதாயுகமே
சாட்சி;—அவை தந்திடும் இன்றே—சுய
ஆட்சி ; இதில் எள்ளளவும் ஐயமே வேண்டாம்.

ரு. அப்பிராமணத் தலை செப்பிடும் வெண்பா.

வேதியரும் யாமும் ஒரு பந்தியினில் வீற்றிருந்து
பேதியா துண்ணும்நாள், பீடையெலாம்—காதத்
தொலை யாகும் ; இந்திய சுயராஜ்யம் அன்றே
நிலையாக நம்மை நெருங்கும்.

வந்தே மாதரம்!

—அமுதகவி






# மாதர் பகுதி

## ஹிந்து ஸ்திரீகள்



(83-ம் பக்கத்தின் தொடர்ச்சி - ஓர் இந்திய ஸ்திரீ எழுதியது.)

எந்த நல்ல காரியமும், வெகு நாளைக்கு அதே மாதிரியில் இருக்கிற தில்லை. அதற்குக் கெடுதல், முயற்சி யில்லாமலே வந்துவிடு கிறது. நல்லதனமாயிருக்க, அனேகம் நல்லவர்கள் சேர்ந்து முயற்சித்துக் கற்பித்து, ஆகவேண்டி யிருக்கிறது. கெடுதலா யிருக்க, ஒருத்தரும் கற்றுக்கொடுக்க வேண்டிய தில்லை. நல்லவர்கள் கவனியாமலிருந்தாலே போதும்; தானுகவே வந்து விடு கிறது. இந்த நியாயப்படி, முன் கால வழக்கம்போல் படித்துப் பழகி வந்தவர்கள் சிரத்தை குறைய, வருஷங்கள் ஆக ஆக, படிப் பிலும் மற்ற விஷயங்களிலும் சீர் கெட்டுப்போய், நல்லவர்கள் பெரியவர்கள் சொற்படி நடக்கவேணும் என்கிற மரியாதை ஒன்று மில்லாமல், படிப்பதில் சோம்பியும், பெரியவர்களை இகழ்ந் தும், 'ஸ்நானமாம்! பூஜையாம்! ஜெபமாம்! மூக்கைப் பிடித்துக் கொண்டு என்ன பிரயோசனம்?' என்று கேலி பண்ணிக்கொண் டும், அனேகம் பேர்கள் திரியலானுர்கள். அப்பன், பாட்டன் தேடிவைத்த சொத்தைத் தின்று கொண்டு; வீடு, குடித்தனம், வயல் என்றும் கூடப் பார்க்காமல்; அண்ணன், தம்பிகூடச் சண்டைப் பிடித்தும், பூர்வீகச் சொத்தைப் பங்கு பிரித்தும், வாழ ஆரம்பித்தார்கள். புருஷர்கள் பாடு இப்படி ஆகிவிடவே, பெண்டிர்களுக்கும் படிப்பு அடியோடு நின்று போய்விட்டது. வர வர, 'பெண் என்று பிறந்தாலே வேலைகள் செய்யவேண்டியது ஒன்றுதான் அவர்கள் கடமை' என்ருய் விட்டது. பெண்களுக் குப் பத்து வயதுக்குள் கலியாணம் பண்ணித்தீர வேண்டு மென்ற ரூலை ஏற்படுத்தி விட்டார்கள். அந்த வயதுக்குள் தங் களுக்குச் சரியான மாப்பிள்ளை கிடைத்தால் சரி, அப்படிப் பிள்ளை கிடையாவிட்டாலும், பெண்ணுக்குப் பத்து வயதாகி, கலியாண மாசங்கள் வந்துவிட்டால், மாப்பிள்ளை யார் என்று தெரியாவிட்டா





லும், கலியாணத்துக்கு வேண்டிய காரியங்களெல்லாம் செய்தாய் விடும்; அந்தந்த மாசத்திலுள்ள முகூர்த்தங்களில், கடைசி வரை யில், மாப்பிள்ளை தேடி, தங்களுக்குத் திருப்தியில்லா விட்டாலும், 'அவள் அதிர்ஷ்டம்போலிருக்கிறது; நம்மால் கூடியமட்டும் பார்த்தாய் விட்டது. அவளுக்கு அவ்வளவுதான் அதிர்ஷ்டம்' என்று, தங்களுக்கு இஷ்டமில்லாத ஒரு பையனுக்கேனும் கலி யாணம் பண்ணிக் கொடுத்தாய்விடும். அந்தப் பெண்ணுக்கோ, வேடிக்கையும் விளையாட்டுந் தவிர, வேறென்றும் தெரியாது. பெற்றோர்களோ, 'இந்தப் பிள்ளை சரியா யில்லை; அடுத்த வருஷம் பார்க்கலாம்' என்று நினைக்காமல், 'இனிமேல் அடுத்த வருஷம் ஒரு பிள்ளை பிறக்கப்போகிருனு? நம்மால் கூடியமட்டும் பார்த் தாய்விட்டது; அவள் அதிர்ஷ்டம் போலிருக்கிறது' என்று, அதிர்ஷ டத்தினிடத்தில் தங்கள் பெண் பாரத்தை எல்லாம்போட்டு விட்டு, பத்து வயதுக்குள் கலியாணம் பண்ணித் தீரவேண்டிய கடமை மட்டும் தங்களுடையதாக நினைத்து, முன்பின் அறியாத, குடும்ப விவரம் ஒன்றுந் தெரியாத, ஒரு குடும்பத்தைக் சேர்ந்த ஒரு பையனுக்குக் கலியாணம் பண்ணி விடுவார்கள். பிள்ளையைப் பெற்றவள், தன் பிள்ளைக்கு கலியாணமானது முதல், அந்தப் பெண், எப்பொழுது பெரியவளாகி வீட்டுக்கு வரப் போகிருள்? அவளிடத்தில் வீட்டு வேலைகளை ஒப்புவித்துவிட்டு, தான் காலை நீட்டி உட்காரலாமென்று, எதிர் பார்க்கிருள். அவர்களிஷ்டம் போல், பெண்களும், பன்னிரண்டு வயதுக்குள் பெரியவர்களாகி, புக்ககத்துக்கு வருகிருர்கள். புக்ககம் போனது முதல், வீட்டி லுள்ள எல்லா வேலைகளும், அந்தப் பெண்ணுக்குச் சொந்தமே தவிர, சாப்பிடுதல், கணவனுடன் கூடியிருத்தல் ஒன்றும், அவ ளிஷ்ட மில்லை. எவ்வளவு பசியாயிருந்தாலும், மாமியார் சாப்பிடலா மென்று சொன்னுல் தான், சாப்பிடலாம்; மாமி வீட்டிலில்லாத பொழுதுதான், கணவனிடத்தில் பேசலாம். இந்த மாதிரி ஆட் சிக்குள் பெண்களை வைத்து நடத்தவே, பெண்கள் செல்வமுள்ள இடத்தில் பிறந்து, அருமையும் பெருமையுமாய் வளர்ந்து, எவ் வளவோ சீரும் சிறப்புமாய்ப் புக்ககத்துக்கு வந்தாலும், முன் சொன்ன மாதிரியிலிருக்க வேண்டியது அவர்கள் கடமை. பிள்ளை ஏழையாயிருந்தால்கூட, அவன் புருஷனைதினுல், அவனை ஒருத் தரும் ஒன்றுஞ் சொல்லக்கூடாது. இஷ்டமானபடி நடக்கலாம். அவன் வீட்டுக்கு வந்தால், பெண்டாட்டி பேசக்கூடச் சொந்த மில்லை. அவன் கெட்டவனுயிருந்தாலும், ஏனென்று கேட்கக் கூடாது; ஏனென்ருல், அவன் புருஷனென்ற நியாயந்தானே தவிர வேறில்லை. புருஷன் விஷயத்தில், நியாயம் அநியாயம் என்ப

தில்லே. அவன் வெளியிலும வெயிலிலும் போய் சம்பாதிக்கிறுன்; பெண் வீட்டில் உட்கார்ந்து, வேலேமட்டுஞ் செய்து, சம்பாதித்த தைச் சமைத்துவிட்டு, நிழலிலிருந்து சாப்பிடுவதனுல், அவளுக் கென்ன கேடுவந்த தென்று, பெண்களேப் பெண்டுகளே தூற்று வார்கள். புருஷர்கள் அலேந்து திரிகிறுர்கள்; அவர்கள் எப்படி நடந்தாலும் ஒன்றுஞ் சொல்லக்கூடா தென்பது, எப்பொழுதும் ஒரு பொது அபிப்பிராயம்.

(தொடரும்)







# நீதி மாலை

(15-பக்கத்தின் தொடர்ச்சி)

## 2. ஆர்கோலிஸ் பந்தய ஓட்டம்.



கிரீஸ் தேசத்திலே ஆர்கோலிஸ் என்ற இடத்தில் பந்தய விளேயாட்டுக்கள் நடக்கும். உயிர்த் தோழர்களான நிகேதர், கிலி யான் என்ற இருவரும், தோளோடுதோள் உராயப் பந்தயம் ஓடினர். குறித்த எல்லையை நெருங்கும் தறுவாயில், கிலியானின் மிதியடி சிறிது சறுக்கியதால், நிகேதர், ஒருவிரற்கிடை முந்தி, பந்தயத்தைக் கெலித்துவிட்டான். மற்றெவரினும் அதிகமாக, தன் தோழனேக் கிலியான் புகழ்ந்து பேசினுன்; பந்தய மத்யஸ்தர்கள், இருவருக்கும் ஒரே விதமான பரிசுகள் கொடுத்தனர்; ஆயினும், ஜெயமுற்ற நிகேதரின் கற்சிலேயை மாத்திரம், ஊரின் மதிற்சுவர் மீது இலங்கும்படி செதுக்கி வைத்தனர். கெலித்தவனே இவ் வாறு விருது பெறுதல் நியாயந்தான் என்று, கிலியான் மேலுக்கு ஒப்பினுன்; ஆனுல், தன் தவறின்றி, பலக்குறை வின்றி, செருப்புத் தடுக்கி, இப்படிப்பட்ட பெருங் கீர்த்தியைத் தான் இழந்ததை நினேக்க நினேக்க, அவன் மனம் நொந்தது; தன் நண்பன் நிகேத ருக்கு எவ்விதத் தீங்கையும் அவன் எண்ணுவிட்டாலும், தன் மனத்தில் முளேத்தெழுந்த பொறுமையினுல், நிகேதரின் சிலே நாட்டிய இலங்குவதைக் காணச் சகியாது, வருந்தினுன். அந்த வழியே செல்லும்போ தெல்லாம், அந்தச் சிலேயையும், அதன் பீடத்தையும் கவனித்து, அதைச் சிதைக்கும் யுக்தியை ஆலோ சிக்கலானுன். அழுக்காறுகொண்ட கிலியான் வாழ்நாள் இவ்வாறு கசப்புறவே, ஒரு நாளிரவு, யாவரும் அறியாமல், ஒரு வடக்கயிற் றோடு மதிற்புறம் சென்று, நிகேதரின் சிலேயைச் சுற்றிக் கயிற்றை மாட்டித் தன் இடுப்பில் பிணேத்துக்கொண்டு, கீழே நின்று, கிலி யான் வலுவாயிழுத்தான். முதலில் சிலேமட்டும் சிறிது அசைந்தது; பிறகு பீடமும் அசைந்தது; அப்பால், கிலியான் மூச்சுப்பிடித்து மும்முரமாயிழுக்கவே, சிலே பீடத்தோடு பெயர்ந்து, மதிற்சுவரை விட்டுத் திடீரென அவன் மீது விழுந்து, அவனே நசுக்கிக்

கொன்று, தானும் சின்னபின்ன மாயிற்று. கிலியானின் துர்எண்ணம் இவ்வாறு நிறைவேறிற்று. மறுநாட் காலையிலே நகரத்தார் எல்லோரும் வந்து பார்த்து, கிலியான் மரணத்தையும் நிகேதரின் கீர்த்திச் சிலை அழிந்ததையும் நினைந்து வருந்தினர். நிகேதரும், சிலைக்காக வருந்தினன்; தன் உயிர்த்தோழனுக்காக, அதனினும் அதிகம் வருந்தினன். நாயனர் வாக்கு இது :—

"அழுக்காறு என ஒரு பாவி, திருச் செற்றுத்
தீயுழி உய்த்து விடும்."

## 3. மூடபக்தி முதலுக்கு மோசம்

ஒரு தனவான், ஒரு குரங்கைப் பிரியமாய் வளர்த்துவந்தான். அதற்குப் பல வேடிக்கைகள் செய்யக் கற்றுக்கொடுத்திருந்தான்; தவிர, விசிறியைக் கையில் கொண்டு, தனக்கு விசிறும்படியும் கற்பித்திருந்தான். அருங்கோடையில் ஒரு நாள் அவன் உறங்குகையில், குரங்கு அவனுக்கு விசிறிக்கொண் டிருந்தது. அப்பொழுது ஓர் ஈ வந்து அவன் மேல் உட்கார்ந்தது. குரங்கு விசிறியால் ஓட்டிப் பார்த்தும் போகாமல், அந்த ஈ, ஓரிடம் விட்டு ஓரிடமாக, தூங்குபவன் மேல் உட்கார்ந்தது. குரங்குக்குக் கோபம் வந்துவிட்டது; உடனே குரங்கு, விசிறியைக் கீழே எறிந்துவிட்டு, அரிவாளை எடுத்துவந்து, தன் யஜமானன் கழுத்தின் மேலிருந்த ஈயை இரண்டு துண்டாக வெட்ட எண்ணி, வாளை விசியது. ஈ, தப்பிப் பறந்து போய்விட்டது; தனவான், இரு துண்டாகி மடிந்தான்.

—மா.





## கம்பராமாயண இன்கவித் திரட்டு

(60-பக்கத்தின் தொடர்ச்சி)

ஸ்ரீ. வெ. ப. சுப்பிரமணிய முதலியார், G. B. V. C., வெள்ளக்கால்



22. ஈட்டுவார் தவமலால்மற் றீட்டினல் இயைவ தின்மை
காட்டினர் விதியார்: அஃது காண்கிற்பார் காண்மின் அம்மா!
பூட்டுவார் முலை பொருத பொய்யிடை நையப் பூநீர்
ஆட்டுவார் அமரர் மாதர்; ஆடுவார் அரக்கர் மாதர்.

இ - ள். (அக்காட்சியைக் கண்டபோது, அநுமான் தன் மனத்துள்ளே கூறியதாவது:—) சம்பாதிப்போர் தவத்தையன்றி வேறெதனையும் சம்பாதித்தால், (அதனால்) அடைவது (ஆகிய நன்மை ஒன்றும்) இல்லாமையை விதியார் காட்டியுள்ளார். அக் காட்சி ஆச்சரிய மானது. அதனைக் காண விரும்புவோர்கள் இங்கே வாருங்கள்; இதோ பாருங்கள்; (தவத்தைச் சம்பாதியாத) தேவர்களுடைய பெண்கள் தனபாரம் தாங்கமாட்டாத சிற்றிடை (பெரிய நீர்க் குடத்தையும் சுமந்து) வருந்த நீராட்டுகிறார்கள். (தவத்தைச் சம்பாதித்த) அரக்கருடைய பெண்கள் (சுகமாக) நீராடுகின்றார்கள் (என்பது).

ஈட்டுதல்-சம்பாதித்தல். இயைதல்—பொருந்தல். விதி-பிரமன். விதியார் என்பதில் ஆர் உயர்வுப் பன்மை விகுதி. அஃது-காட்டினதைக் குறித்தது. வார் (-கச்சு) பூட்டும் முலை யெனக் கூட்டுக. பொய்இடை-இல்லை யென்று சொல்லும்படி சிறந்த இடை. பூ-அழகு; பொலிவு.

"பலவகை மகளிரைக் கூறத் தொடங்கித் தெய்வ நீராற்றிற் றெண்ணீர் [கொண்டு] வானவர் மகளிராட்ட அரக்க மாதர் மஞ்சன மாடுவாரைக் கூறியவிடத்து அங்ஙன மாடுதற்குக் காரணங் காட்டுவாராய்த் தவப் பெருமையைப் பாராட்டுகின்ற இச் செய்யுள் இடைப் பிறவரலாக நின்றதென்க. இங்ஙனம் கதை நிகழ்ச்சியைக் கூறுமிடத்து, அதனாற் போந்த பயனை ஆங்காங்கு உலகத்தாரை நோக்கிச் சொல்லிப்போதல் ஒருவகைக் கவிசமயம்."

"திருவள்ளுவர் அறன்வலியுறுத்தலில் 'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை, பொறுத்தானோ டூர்ந்தா னிடை' என்று அறத்தின் சிறப்பை எடுத்துக் காட்டினாற் போல, இங்கு இங்ஙனம் தவத்தின் சிறப்பை எடுத்துக் காட்டினர்."

வேண்டியதைக் கேட்டாற் கொடுக்கும் சிந்தாமணி வேண்டாமலே விளக்கொளியை வெப்பந் தவிர்த்துக் கொடாநிற்ப, அவ்வொளியில் கந்தருவ மகளிர் நடனமாடுவதைத் தாம் பஞ்சணையிலே சாய்ந்தபடியே யிருந்துகொண்டு காண்பவரையும்,—தம் கணவர்

தம் மனப் புலத்து விதைத்த காமப் பயிர் தழைத்து வளர்தற்கு வார்க்கும் நீர் போல, உள்ளக் கருத்தைத் தெள்ள உரைக்கும் கண்ணைச் சிவப்பிக்கும் கள்ளைக் குடிப்பவரையும் அநுமான் கண்டான்.

23. உள்உடை மயக்கால், உண்கண் சிவந்துவாய் வெண்மைஊறித்
துள் இடைப் புருவம் கோட்டித் துடிப்ப,வேர் பொடிப்பத் தூய
வெள்ளிடை மருங்கு லார்தம் மதிமுகம் வேறொன்றாகிக்
கள்ளிடைத் தோன்ற நோக்கிக் கணவரை கவல்கின் றாரை.

இ-ள் (மேற்கூறியவாறு கள்ளைக் குடிப்பவருள்ளே, ஒரு முறை குடித்த கள்ளால் உண்டாகிய) மயக்கத்தினால் (கருங்) கண்கள் சிவப்பேறி (செவ்) வாய் வெளுப்பூறி (இரண்டும்) துடிக்கும் சமயத்தில், புருவமும் துடிக்க, வியர்வை பொடிக்க, முகம் வேற்று முகமாகி, (மறுமுறை குடிக்கத் தொடங்கிய) கள்ளிலே (தாம் பிறர் போலத் தோன்ற)

I. நோக்கி (ஐயையோ! நம்மைக்காணேமே! பிறரையன்றோ காண்கிறோம்! நம் கணவர் நம்மைத் தேடிக் காணாது திண்டாடுவாரே! யாது செய்வோம்! என்று)

அல்லது-II. (தாமறியாது தம்பின் நின்றதம்) கணவரை (வேற்றுருவடைந்திருக்கிற தம்மோடு) கண்டு (நம் கணவர் பிற மாதரோடு சேர்ந்தாரே! யென்று) தம் கணவரைக் குறித்துக் கவலைப் படுகின்றவர்களை (அநுமான் கண்டான்.)

உள் உடை மயக்கு-மனத்தைச் சிதறச் செய்த (கள்உண்ட) மயக்கம். உண் கண் சிவந்து வாய் வெண்மை ஊறி மையுண்ட கண் சிவந்து வாய் வெளுத்து துள் இடை-(இரண்டும்) துடிக்கும் சமயத்தில் புருவம் கோட்டித் துடிப்ப-புருவம் வளைக்கப்பட்டுத்துடிக்க. எழுதப்பட்ட ஓலையை எழுதிய ஓலையென்றாற்போலப் புருவங் கோட்டப்பட்டு என்பது 'புருவங் கோட்டி' எனப்பட்டது. கள்ளுண்ட மயக்கத்தால் உண்டாகிய முகச்சேட்டையால் இயல்பாக வளைந்த புருவம் அதிகமாக வளைக்கப்பட்டது என்பது குறிப்பு. 'பெயர்' 'பேர்' என ஆகுதல்போல 'வியர்வை' 'வேர்வை' யென்றாகி ஈறுதொக்கு 'வேர்' எனச் செய்யுளில் வரும். பொடித்தல்-தோன்றுதல்: ["கூழை (கூந்தல்) முடியா முலை பொடியா (முளையாத-தோன்றாத) ஒரு குதலைச் சின் மழலைக்கு" திருக்கோ-௩௦௪. சங்க அகராதி.] தூய-சுத்தமான. வெள்ளிடை-வெளி-ஆகாயம் 'பொய்யிடை' போல, 'வெள்ளிடை' மருங்குல் 'மிகச் சிறுத்த இடை' என்ற பொருள் குறித்தது. ஆகாயம் இடைக்கு உவமானமென்பதை "முலையும் மந்தரம் இடையும் அந்தரம்" என்பதில் காண்க.

II அடையாளமிட்ட உரைப்பகுதியில் "நோக்கிக் கணவரைக் கவல்கின்றாரை" என மாற்றிக்கொண்டு பொருள் கூறப்பட்டது.



கண் சிவத்தல் வாய் வெளுத்தல் கண்ணும் வாயும் புருவமும் துடித்தல் வியர்வை பொடித்தல் கவல்கின்றமை ஆகிய இவைகட்கெல்லாம் ஒரு காரணம் கள் மயக்கமென்பதை 'மயக்காய்' என்பதனால் குறிப்பித்தார். இப்பாட்டும் இதனோடு குளகமாக முன் பின்வரும்பாட்டுக்களும் இப்படலத்தில் 'இயக்கியர்' என்ற கஉ-ம் பாட்டில் வினை முடிவு பெறுகின்றன.

இப் பாட்டில் குறிப்பாகவும் சுருக்கமாகவும் கூறப்பட்டுள்ள மிக விநோதமான கருத்துகள், ஸ்ரீ.சே. கிருஷ்ணமாசாரியார் பதிப்பில் இப்பாட்டின் கீழ் எடுத்துக்காட்டப்பட்ட திருவிளையாடற் புராணச்செய்யுள்களில் வெளிப்படையாகவும் விரிவாகவும் கூறப்பட்டிருக்கின்றன. அச் செய்யுள்கள் வருமாறு:—

சாடியுள் நறவம் உண்டாள், தன் உரு வேறுபாட்டை
ஆடியுள் நோக்கி, 'நானே அல்லனே? எனத்தான் கைக்கொண்
டோடினர் பிறரும் உண்டோ? உயிர்அன்னான் வந்திங் கென்னைத்
தேடின், என் செய்கேன்! என்னைத் தேடித்தா சேடி" என்றாள்.
(நறவம்-கள். ஆடி-கண்ணாடி செய்கேன்-செய்வேன்.)

களித்தவள் ஒருத்தி, நின்ற ஆடியுள் கணவன் தன்பின்
ஒளித்தவன் உருவும் தானும் நேர்பட உருத்து நோக்கித்,
துளித்த கண்ணீராளாகி "ஏதிலாள் தோள் தோய்ந் தின்பம்
குளித்தனை இருத்தியோ!" என்றுரைத்தனள் கோபம் மூண்டாள்
(களித்தல்-கள்ளுண்ணல். நின்ற ஆடி நிலைக்கண்ணாடி. உருத்தல்-கோபித்தல். ஏதிலாள்-அந்நியமாது.)



# மிருக பாஷை

ஸ்ரீ. P. N. அப்புஸ்வாமி ஐயர், B. A., B. L., சென்னை



மது நாட்டிலே பண்டைக் கால அமைச்சர்களின் திறமையைப் புகழ்ந்து பேசும்போது, அவர்களுக்கு மிருக பாஷை முதலியன நன்கு தெரியு மென்று சொல்வ துண்டு.

உண்மையில் மிருகங்கள் எல்லாம் ஓரே பாஷையை ஏற்படுத்திக் கொள்ள வில்லை என்பதும், அவ்வாறே பக்ஷி இனம் முழுவதும்

ஒரே பாஷையைப் பேசுவதில்லை என்பதும், எளிதில் நிரூபிக்கக் கூடும். ஒரே வகுப்பைச் சேர்ந்த மானுடரே ஒரே பாஷையைப் பேசாமல், ஒவ்வோர் இடத்தில் ஒவ்வொரு விசித்திரமான பாஷையைப் பேசுவது, இதற்கு ஒரு சான்றாகும்; ஆயினும், ஒவ்வொரு தனியான வகுப்பைச் சேர்ந்த மிருகமோ, பக்ஷியோ, அந்த வகுப்புக்கு அருத்தமாகக் கூடிய பொதுவான ஒரு பாஷையைப் பேசலாமல்லவா? அவ்வாறு மிருக பக்ஷிகள் தம் இனத்தோடு உறவாடிக் கொஞ்சியும், கோபித்தும், நகைத்தும் வருந்தியும் பேசுகின்றனவா, அல்லவா? அவை தம் மனத்துள் உதிக்கும் எண்ணங்களைத் தத்தமக்கு இயன்றவாறு வெளியிடுகின்றனவா?

பண்டைக் கால நூல்கள் சிலவும், கதைகள் பலவும், மிருக பக்ஷிகள் நம்மைப் போலவே சிறந்த அறிவு பெற்று, நாம் ஒருவரோடொருவர் பேசிக்கொள்வது போலவே, விளையாட்டாகவும், பொழுதுபோக்காகவும், வம்பளந்தும், இரகசியமாகவும் பேசி, நம்மையும் நமது விஷயங்களையும் ஊன்றிக் கவனித்து வருகின்றன என்றும், அவற்றின் பாஷையை மனிதர் அறியக் கூடும் என்றும், கூறுகின்றன.

ஆராய்ந்து பார்த்ததில், மிருகங்களும் பக்ஷிகளும் தம் இனத்தோடு பேசிக்கொள்கின்றன என்பது மாத்திரம் துலங்கிற்று; வேறொன்றும் நிச்சயமாகத் தெரியவில்லை.

நமக்குத் தெரிந்தவரையில், அவை, நம்மைப் போல அறிவுள்ளனவில்லை: அவற்றுக்கு மனத்தில் தோன்றக் கூடிய எண்ணங்கள், மிகக் குறை, மிகவும் சாதாரணமானவை ஆயினும், அவை, தமது சிறு மனத்தில் தோன்றும் எண்ணங்கள் முழுவதையும், தம் இனத்துக்குத் தெரிவிக்கின்றன என்று, நிச்சயமாகச் சொல்லுதற்கில்லை. ஏனெனில், அவை பேசும் பாஷை சில ஒற்றைப் பதங்களால் ஆவன. அவற்றைக் கொண்டு எல்லாவித எண்ணங்களையும் வெளியிடுவது, முடியாத காரியம். உயிர்களுக்குப் பொதுவான பயம், கோபம், நோவு, பசி, துக்கம், சந்தோஷம், ஆசை முதலிய சில உணர்ச்சிகளையும், அவற்றை ஒட்டிய சிற்சில நிகழ்ச்சிகளையுமே, விலங்கு புள்ளினங்கள் வெளியிடல் கூடும்.

சிற்சில மிருகங்களுக்கு, வேறு சிலவற்றை விட, அதிகம் "பேச்சு வந்திருக்கிறது;" ஆகையால், அவை வேறு சில நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசுதலும் கூடும். ஆனால், நமது கட்டுக் கதைகளில் சொல்லுவதுபோல, அவை, ஒரு நாளும் பேசியதில்லை; இனிமேல் பேசுவதும் துர்லபம்.

மனிதனுக்கு அனேக விஷயங்களில் அடுத்தபடியாய் இருக்கும் குரங்குகள், ஒருக்கால் ஏதாவது பாஷையை ஏற்படுத்திக் கொண்டிருக்குமோ என்று, பலர் ஆராயப்புகுந்தனர். அவர்களுள்



ஒருவராகிய டாக்டர் கார்னர் என்பவர், ஆப்பிரிக்காக் கண்டத்துக் குரங்கினங்களைச் சோதித்துப் பார்த்ததில், அங்கேயுள்ள சாதாக் குரங்கு ஏழுவகை ஒலியையே செய்கிறது என்றும்; சிம்பன்ஸி என்னும் குரங்கு, இருபத்திரண்டு வகை ஒலிகளைச் செய்கிறது என்றும், அறிந்தார். அதாவது, சாதாக் குரங்கின் பாஷையில் மொத்தம் ஏழே ஏழு வார்த்தைகள்; சிம்பன்ஸியின் பாஷையில் இருபத்திரண்டு வார்த்தைகள் என்கலாம். இவற்றைக் கொண்டு எவ்வளவு பேசிவிட முடியும்?

எட்மண்ட் ஸேலூஸ் என்பவர், காக்கைகள் (Rook) முப்பத்து மூன்று வகையாய்க் கூவுவதைத் தாம் கேட்டிருப்பதாயும்; அவை வேறு வகையாய்க் கூவுதலும் கூடுமென்றும்; ஆதலால், கூடிய சீக்கிரம் ஒரு பாஷையை அவை ஏற்படுத்திக் கொள்ளலாமென்றும், கூறுகிறார். ஆனால், குறிப்பிட்ட ஓர் ஒலிக்குக் குறிப்பிட்ட ஒரு பொருள் தானென்று, அவை சங்கேதம் வைத்துக் கொண்டதாகத் தெரியவில்லை என்றும் சொல்லுகிறார்.

இவ்வாறே, மற்ற மிருக பக்ஷி இனங்களிலும். ஆயினும், இவற்றைக் கொண்டு ஒன்றும் நிச்சயமாகக் கூறுவது முடியாது. ஏனெனில், குரலைக் கொண்டுதான் ஒன்றோடொன்று பேசவேண்டுமென்ற விதியில்லை. பேச்சைப் பெருக்கிய நமக்குள்ளுமே, கண்ணும் கையாலும் எவ்வளவெல்லாம் பேசிக் கொள்ளுகிறோம்! மிருகங்களும் பக்ஷிகளும் ஏன் அதே மாதிரி பேசிக்கொள்ளக் கூடாது? குரலே இல்லாத எறும்புகள் ஒன்றோடொன்று பேசிக் கொள்ளுவது, நமக்குப் பிரத்தியக்ஷமாய்த் தெரிகிறதே.

இவையெல்லாம் மிகவும் விந்தையானவை; ஆராய்ச்சி செய்யச் செய்ய, அதிகம் இன்பம் தாத் தக்கவை; எனினும், இதுவரை ஒழுங்காகச் செய்துள்ள ஆராய்ச்சியினின்று, இன்னும் எதுவும் நிச்சயமாகக் கூற இயலாது.

நாள் செல்லச் செல்ல, கடவுளின் இயற்கை விநோதங்களில் ஒன்றாகிய இதுவும், நமக்கு ஒரு சிறிது தெரிந்தாலும் தெரியலாம். அதுவரை என்ன அவசரம்?



# பூம்புகார்ச் சரிதை

ஸ்ரீ. K. R. சுப்பிரமணிய ஐயர், M. A.,
விஜயநகரம்




ன் காலத்தில் பூம்புகார் ஒரு பெரிய நகரமாயும் துறைமுகமாயும் இருந்தது. புகார் என்கிற வார்த்தையி லிருந்து, அவ்வூர் ஜனங்கள் தம்மூரில் ஒன்றில்லை யென்று நாடி, அதற்காக வெளியூர் புகமாட்டார்களென்று அர்த்தம் பண்ணிக்கொள்ளலாம்; அவர்கள் அவ்வளவு பணக்காரர்கள். அதற்குப் பட்டினம் என்றும் பெயர். ஏனென்றால் சோழநாட்டில் அதுவே பெரிய துறைமுகமாம். காகந்தி என்று மற்றொரு பெயரும் உண்டு. ககந்தன் கதையில் வரும் துர்க்கா தேவியின் கோயில் தானே, இப்பொழுது அவ்வூரில் இருப்பது? புகார் என்னும் பெயர் சங்கச் செய்யுட்கள் வாசிப்பவர்களுள் தவிர, மற்றொருவருக்கும் தெரியாது. காவேரிப்பட்டினம் என்றால் தான் தெரியும். அங்கேதான் சுமார் 2000 வருஷங்களுக்கு மேலாக, காவேரி சங்கமமாகி வருகிறது. கர்ண பரம்பரையி லிருந்து, இவ்வூர், ஒரு பக்கத்தில், திருவெண்காட்டி லுள்ள மணிகர்ணிகை நதிவரையிலும், மற்றொரு பக்கத்தில் திருக்கடவூர் வரையிலும், மூன்றும் பக்கத்தில் எல்லையம்மன் கோயில் வரையிலும், பரவி யிருந்ததாகத் தெரிகிறது. ஜனங்கள், கடல் வெகு தூரம் உள்வந்திருக்கிற தென்றும், பழைய பட்டினம் இப்பொழுது கடலின் கீழ் இருக்கிற தென்றும் சொல்லுகிறார்கள். இப்போது இவ்வூரின் பக்கத்தில் இருக்கிற நெய்தல்வாசல், மணிகிராமம் என்கிற ஊர்கள், முன்னாளில் புகாரில் அடங்கி இருந்தன. இப்பொழுதுகூட, சாயாவனம், பல்லவனம், பழைய காவேரிப்பட்டினம், கீழையூர், என்று, நான்கு பாகங்கள் இருப்பதைப் பார்த்தால், இது ஒர் பெரிய ஊராக இருந்திருக்க வேண்டு மென்று ஊகிக்கலாம்.

அகித்த ஜாதகத்தில், புத்தர் தமிழ் நாட்டுக்கு வந்து, காவேரி பட்டினத்துப் பூங்காவனத்தில் வசித்து வந்ததாகச் சொல்லியிருக்கிறது. இதைத் தவிர, தாலமி என்பவர், இவ்வூரை Chaberis emporium என்றும்; Periplus என்னும் நூலில், இதை Kamara என்





றும் சொல்லுவது மன்றி; கி. பி. முதல் நூற்றாண்டுகளில் சீர்த்திக்குக் கரைகட்டிய கரிகாலனிடம், கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிய பட்டினப் பாலையும், துறவி இளங்கோவடிகள் இனிமையாகப் பாடிய சிலப்பதிகாரமும், மதுரைச் சீத்தலைச் சாத்தனார் பாடிய ஞானரஸம் உள்ள மணிமேகலையும், புகாரைச் சிறப்பிக்கின்றன. கரிகாலன் நாளி லிருந்து, கிள்ளிவளவன் நாள் வரையில், இதுவே சோழராஜ்யத்தின் தலை நகர். வசதி ஸௌகர்யங்களுக்கும், வர்த்தகத்திற்கும், கப்பற்படை வைத்துக் கொள்வதற்கும், உறையூரை விடப் பூம்புகார் மேம்பட்டதே. புகாரில், பட்டினப்பாக்கம் என்றும், மருவூர்ப்பாக்கம் என்றும், இரண்டு பிரிவுகளிருந்தன. கணக்கில்லாத வியாபாரம் நடந்து வந்தது. சங்கமஞ்துறைத்திலே, காவேரியாறு, உரோமர், சீனர், கிரேக்கர் முதலியவர்களின் கப்பல்கள் செல்லும்படி அகலமாயும் ஆழமாயும் இருந்தது. இலங்கைக்கு அருகி லுள்ள நாகர்களின் தீவாகிய மணிபல்லவத்தோடும்; இரத்தின தீபமாகிய இலங்கையோடும்; சாவகம் (ஜாவா), சுமித்ரா தீவுகளோடும், அடிக்கடி போக்கு வரத்து நடந்ததாகவும், தெரிகிறது. குதிரைகள், மிளகு, சந்தனம், சூடம், முத்துக்கள், இரத்தினங்கள், மணிகள், பவளம், முதலியவைகள் புகாரில் இறக்குமதியாயின. சுங்கம் வாங்கும் சாவடிகளில், எல்லாப் பண்டங்களுக்கும் சோழரின் புலி முத்திரை போட்டார்களாம். கப்பல்களுக்கு உதவியாய் ஒரு தீபஸ்தம்பம் (கலங்கரை விளக்கம்) இருந்ததாம். வியாபார விவஸாயங்களைத் தவிர, பட்டு, பருத்தி நெசவும், மீன் பிடித்து வியாபாரம் செய்தலும், விசேஷமான தொழில்களா யிருந்தன. செம்படவர்கள் விடுமுறைநாளில் வலைகளைத் தைப்பதும், உலர்த்துவதும்; அவர்கள் குழந்தைகள் சமுத்திர மணலிலும் ஜலத்திலும் விளையாடுவதும், இப்பொழுதும் பார்த்து ஆனந்திக்கத் தக்கது. மணிமேகலையில் வரும் கம்பளச்செட்டியைப்போல் எத்தனை கப்பற்காரர்கள் இருந்தனர்களோ! இப்பொழுது இவ்வூர் இருக்கும் நிலையைப்போல், பட்டினப்பாலையில் புகழும் பசுமையான வயல்களும், தோட்டங்களும், சோலைகளும் இருந்தனவென்று நம்ப முடியாது.

நாளங்காடிப்பூதம், சதுக்கப்பூதம், சாதவாகனன், சாத்தன், சூரியன், சந்திரன், காமன், பலதேவன், இந்திரன், ஐராவதம், கற்பகம், வச்சிரம், வேல், சிவன், விஷ்ணு, புத்தன், அருகன், முதலியவர்களுக்குக் கோயில்களும், அனேக யாகசாலைகளும், புகாரில் இருந்தன. இப்பொழுது கீழையூரில் அகஸ்தீஸ்வரர்கோயில் இருப்பதையும்; அக்கோயிலில் இருக்கும் தேவர்கள், காவேரியின் கலியாணத்திற்கு வந்தார்களென்று சொல்லும் கதையையும்; துர்க்கை, அங்காளி, வாழ்முனி, சாத்தன், முதலியவர் கோயில்கள்

இருப்பதையும் கவனித்தால், இவ்வூரும், இக்கோயில்களும், வெகு
புராதனமானவை யென்பது தெளிவாய்த்தோன்றும். பிணிதீர்க்கும்
புஷ்கரணிகளும், விஷம் தீண்டினவர்கள், பேய் பிடித்தவர்கள்,
பயித்தியக்காரர்கள், முதலியோர் தொழும் கல்தூணும், இருந்த
னவாம். இப்பொழுது திருவெண்காட்டிலுள்ள சூரிய சந்திர அக்
கினி தீர்த்தங்களையும்; வெகு பழைமையான சாயாவனத்துக் கோ
யிலைச் சேர்ந்த சகல வியாதிகளையும் தீர்க்கும் புஷ்கரணியையும்
கவனிக்கு மிடத்து, மேலே சொன்ன தீர்த்தங்களில் இவைகள்
அடங்கி யிருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஒவ்
வொரு வருஷமும், இந்திரோத்ஸவம் நடந்த தென்றும்; தேவ
தைகளை, வாத்தியம், நாட்டியம் சங்கீதங்களுடன், சமுத்திரத்திற்
குத் தூக்கிக் கொண்டு போனார்க ளென்றும்; ஒரு வருஷத்திலே
அருமருந்தன்ன தன் குழந்தையை இழந்த சோழ ராஜன்,
துயரத்தால் அவ் வுற்சவத்தை நடத்தாததால் ஊரைக்கடல்
கொண்ட தென்றும், கதை சொல்லும். இப்பொழுது வருஷா
வருஷம், மாசி மாதத்தில், மாயவரம், திருவெண்காடு,
சாயா வனம், பல்லவனம், கீழையூர்க் கோயில்களி லிருந்து, உத்
ஸவ விக்கிரகங்கள் காவேரிபட்டினத்துக் கடலுக்கு எழுந்தருளு
கின்றன; இதற்கும், மேலே கதையில் சொன்ன இந்திரவிழாவுக்
கும், ஏதேனும் சம்மந்தம் உண்டோ?

அரசர், கவிகளுக்கும் பாடகர்களுக்கும் நாடகமாடுபவர்களுக்
கும் ஏராளமான பொருள் கொடுத்தனர். இளங்கோவடிகள் வரு
ணித்திருக்கிற மாதவியைப்போல் பலர் இருந்திருக்கவேண்டும்.
அந்நாளில் இருந்த கூத்துக்களும் இராகங்களும் இப்பொழுது
ஒருவருக்கும் தெரியாது. பட்டினப் பாலையைப்பாடிய உருத்திரங்
கண்ணனாருக்குக் கரிகாலன் பதினாறு லக்ஷம் பொன் கொடுத்தா
னும். பெயர்பெற்ற கவியான நப்பூதனாரும், காரிக்கண்ணனாரும்,
புகார் வாசிகளே. புகாரிலிருந்து சென்ற கப்பல் வியாபாரிகள் மூல
மாய், மதக்கொள்கைகளும் மற்ற நாகரிக விஷயங்களும் அயல்
தேசங்களுக்கும் தீவுகளுக்கும் சென்றிருக்கவேண்டும். அந்நா
ளில், புகாரிலே பல மாளிகைகளும் கோயில்களும் செழிப்புள்ள
தோட்டங்களும் இருந்தன வென்பதற்கு, ஆழமாக வெட்டினால்
இப்பொழுது அகப்படுகிற நாணயங்களும் கேணிகளும் பெரிய
செங்கற்களும் விக்கிரகங்களும் சாக்ஷிகளாகும். கடைச்சங்க காலத்
தில் புகாரரைக் கடல்கொண்டது என்று சொன்னோம். அதற்குப்
பிறகு, புகாரைப்பற்றி, இயற்பகை நாயனார் என்ற சிவபக்தர் காலத்
தில் கேள்விப்படுகிறோம். சிவன், யோகி வேஷம் போட்டுக்
கொண்டு அவரிடம் சென்றபோது, 'நீர் கேட்பதைத் தருகி
றேன்' என்று இயற்பகை சொன்னாராம். அதன் உண்மையைச்



சோதிக்குமாறு, சிவன், அவருடைய மனைவியையே கொடுக்கும்
படி கேட்க, அத்தொண்டர், அப்படியே செய்து, கோபங்கொண்டு
அதைத் தடுக்க வந்த தன் பந்துக்களை வெட்டித்தள்ளினாராம்.
அப்பால், எல்லோரும் பார்க்க, அந்த யோகி, சாயாவனம் கோயிற்
குள் மறைந்து விட்டார். சேக்கிழார் சுவாமிகள், பெரிய புரா
ணத்தில், குளிர்ச்சியும் செழிப்பு முள்ள ஊர் என்று புகாரைச்சிறப்
பிக்கிறார். இப்பொழுது ஆண்டுதோறும் இயற்பகை நாயனார் உற்
சவம் புகாரில் நடந்து வருகிறது.

ஏழாம் நூற்றாண்டிலே திருஞானசம்மந்தர், பல்லவனத்தைப்
பற்றி இரண்டு பதிகங்களும், சாயாவனத்தைப்பற்றி இரண்டு பதி
கங்களும் பாடியிருக்கிறார். அவர் காலத்தவரான திருநாவுக்கரசர்,
சாயாவனத்தைப்பற்றி இரண்டு பதிகங்கள் பாடியிருக்கிறார். சம்
மந்தர், காவேரி சங்கமமாகிற அழகையும், பசுமையான வயல்களை
யும், சோலைகளையும், அபரிமிதமாகக் கிடைக்கிற சங்குகளையும்,
முத்துக்களையும் பற்றிப் பாடியிருக்கிறார். பட்டினத்திலே உயர்ந்த
கட்டிடங்கள் இருந்தன வென்றும், அங்கே ஒருவருக்கும் பசியின்
கொடுமையாவது வியாதியின் பீடையாவது தெரியா தென்றும்
சொல்லுகிறார்.

பட்டினத்துப்பிள்ளை, காவேரிப் பட்டினத்தில் பிறந்து, சிவ
பக்தி சிறந்த மற்றொரு செட்டியார். அவர் பத்தாம் நூற்றாண்டில்
இருந்திருக்கவேண்டும். அவர் பாட்டுக்களில் ஒரு பாகம், பதினோ
ராம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்ட திருமுறைகளில் அடங்கி
யிருக்கிறது. கோயில் நான்மணி மாலையின் கடைசிப் பதிகத்தில்,
சிறுத்தொண்டர் மகன் சீராளரைக் குறித்திருக்கிறார். திருவிடை
மருதூர் மும்மணிக்கோவையில், தேவாரம்பாடிய மூவரையும், பெ
ருந்துறைப் பிள்ளையையும், சோழப்பிரம்மஹத்தி நீங்கி ஒன்பதாம்
நூற்றாண்டில் இருந்த வரகுணபாண்டிய ராஜனையும், குறிக்கிறார்.
இதைத் தவிர, சுந்தரரின் திருத்தொண்டத்தொகையில், பட்டி
னத்தார் பெயர் இல்லை.

வருஷா வருஷம் காவேரிப் பட்டினத்தில் பட்டினத்தார்
உத்ஸவமும் நடந்து வருகிறது. அவருடைய கதை பின்வரு
மாறு:—

குபேரனே பட்டினத்தாராய்ப் பிறந்து, 36-ம் வயதுவரையில்
பிள்ளை இல்லாமல் தவிக்க, சிவனே அவர் பிள்ளையாகப் பிறந்தாராம்.
அப் பிள்ளை, வெகு சாமர்த்தியமுள்ள வர்த்தகனாகி, ஒரு தடவை
இலங்கைக்குப் போய் வியாபாரம் செய்து, கணக்கில்லாத திரவியங்
களைக் கொண்டுவந்தான். அத் திரவியங்களைப் பார்த்து, தகப்பன்
ஆனந்தித்துக் கொண்டிருக்கையில், அப் பிள்ளை, ஒரு காதில்லாத

ஊசியையும், ஒரு பனை ஓலையில் 'இக் காதில்லாத ஊசிகூட, மனிதருடன், இறந்த பிறகு வாராது' என்று எழுதி அச் சுருளையும், வைத்துவிட்டு மறைந்து விட்டான். செல்வத்தின் பயனின்மையை அறிந்து கொண்டு, பட்டினத்தார், தன் திரவியங்களை யெல்லாம் தர்மம் செய்துவிட்டு, ஆண்டி ஆயினர். இவர் ஆண்டியாய் இருப்பதைப் பார்த்து வெட்கமடைந்த இவர் சகோதரி, இவருக்கு விஷம் வைக்க, அவ் விஷம், அவள் வீட்டையே எரித்துவிட்டது. தன் தாயார் இறந்ததும், கர்மங்களைச் செய்துவிட்டு, தென் இந்தியாவி லுள்ள சிவ க்ஷேத்திரங்களை யெல்லாம் தரிசித்துக்கொண்டு இவர் பிரயாணஞ் செய்தார். துளுவதேசத்துப் பத்திரகிரி ராஜன் அரமனையில் கொள்ளை யடித்த திருடர்கள், விநாயகருக்கு ஒரு பொன் ஆரத்தை கொடுக்கவேண்டு மென்று வந்து, இருட்டில் அக் கோயிலில் சமாதியிலிருந்த பட்டினத்தார் கழுத்தில் அந்த மாலையைத் தெரியாமல் போட்டுவிட்டுப் போனார்கள். மறுநாள் காலையில் நமது ஆண்டியைத் திருட னென்று கழுவேற்றுவதற்கு ஏற்பாடு செய்யும்போது, கழு மரம் நெருப்புப் பிடித்துக்கொண்டு எரிந்து விட்டது. பத்திரகிரி ராஜன், உடனே பட்டினத்தார் காலில் விழுந்து, உண்மையைத் தெரிந்துகொண்டு, அவருடைய சீடனாகி, பிறகு, அவருடன் திரிந்து காலம் கழித்தான். பட்டினத்தாரின் சமாதி திருவொற்றியூரில் இருக்கிறது. மேற் சொன்ன கதை, கர்ண பரம்பரையாக வருவது. மெக்கன்ஸி துரை பொறுக்கிச் சேர்த்த சுவடிகளில், 'காவேரிப்பட்டணம் கைபீது' என்று, ஒரு சுவடி இருக்கிறது. அதில், பட்டினத்தார் கதையும், அவருக்கு 9000 கப்பல்களும் தோணிகளும் இருந்தன வென்றும், அவ்வூரில் பிச்சைகாரர்களுக்கு முத்தும், மணியும் கொடுத்தார்க ளென்றும், அவ்வூர் 900 வருஷமாய்த்தான் இருக்கிற தென்றும் சொல்லியிருக்கிறது. பட்டினத்தார், தன் பாட்டுக்களில், தனக்கு இருந்த திரவியங்களைப் பற்றியும், தனக்கு இருக்கிற சம்சார வெறுப்பையும் அடிக்கடி சொல்லுகிறார். தன் தாயாரைப் பற்றி அவர் கூறிய பாடல்களை, கண்ணீர் வராமல் ஒருவரும் வாசிக்க முடியாது. உடற் கூற்று வண்ணத்திலே, மனிதரின் பிறப்பு வளர்ப்பு வாழ்க்கை இறப்பு இவைகளை வெகு அற்புதமாய்ச் சுருக்கிச் சொல்லுகிறார். மேற்சொன்ன காதில்லாத ஊசிக் கதையை, சில பாட்டுக்களில் குறிக்கிறார். காவேரிப்பட்டினத்தில், இவர் சரித்திரத்தில் வரும் 'விலங்குமுறித்த விநாயகர்' கோயில் இருக்கிறது.

பட்டினத்தார், புகாரை விட்டுப் போனதும், மண்மாரி பெய்து அவ்வூரை அழித்து விட்டதாம்: காவேரித் துறைமுகம் தூந்து விட்டதுபோலும். ஆகையால், முகம்மதிய சரித்திரக்காரர்கள் கூறும் பிட்டான் என்னும் பட்டணமாவது, மார்க்கோபோலோ



பார்த்த துறை முகமாவது, காவேரிப்பட்டினமாய் இருந்திருக்க முடியாது.

கர்ண பரம்பரையாக இவ் வூரைப் பற்றிய கதை மற்றொன்றுண்டு: சுமார் 270-வருஷங்களுக்கு முன், அவ்வூரில் சில பிராமண குடும்பங்கள் குடியேற்றி வைக்கப்பட்டன. அவர்கள் வரும் பொழுது, அவ்வூரில் ஆட்டிடையர்களும் மற்றும் சில 'கீழ்'.ஜாதிகளும் இருந்தனராம். இந்தப் பிராமண குடும்பங்களைக் கொண்டு வந்தவர், தஞ்சாவூர் நாயக இராஜாவிடம் மந்திரியாக இருந்த கோவிந்த தீக்ஷிதராய் இருக்கலாம். அக் குடும்பங்களில் முக்கியமானது, ஐயாவையன் என்பவருடையது. அவர், சுமார் 200-வருஷங்களுக்குமுன் இருந்தவ ரென்றும்; மாராட்டிய ராஜர்களிடம் தர்மகர்த்தா, 'ஸர்க்கீல்' மந்திரி, முதலிய வேலைகள் பார்த்தா ரென்றும், 'ஐயாவயன் ஆறு' என்ற ஆற்றை அவர் வெட்டினார் என்றும், திருவெண்காட்டுக் கோயிலைப் பெரிதாக்கிக் கட்டினார் என்றும், சரபோஜி ராஜபுரம், மங்கமடத்துத் தெருவு முதலியவைகளைப் பிராமணர்களுக்கு தானம் கொடுத்தார் என்றும், ஜனங்கள் சொல்லுகிறார்கள். தன் எஜமானனாகிய இராஜாவுக்கு ஒரு குழந்தை பிறக்க, அதற்குத் தங்கத்தால் தொட்டிலும் சங்கிலியும் செய்து காணிக்கை கொடுத்தாராம். அரசன், அவ்வளவு விலை உயர்ந்த காணிக்கையை அவர் கொடுத்ததிலிருந்து சந்தேகித்து, கொஞ்சம் அரிசியையும் உப்பையுமட்டும் கொடுத்து, அவரைச் சிறைச்சாலையில் போட்டுவிட்டானாம். ஜெயிலிலே அவர் நாக்கைப் பிடுங்கிக்கொண்டு உயிர் துறந்தாராம். இறக்குமுன், தன்னுடைய குலதெய்வமாகிய திருவெண்காட்டு ஸ்வாமியின் பெரிய மணி அறுந்து விழவேண்டு மென்றும், வடக்குப் பிராகாரத்தின் சுவர் இடிந்து விழ வேண்டு மென்றும், சபித்தாராம்; அப்படியே நேர்ந்ததாம். அதைத் தவிர, இப்பொழுது கூட, அந்த மணியை மீண்டும் கட்டமுடியா தென்றும், அந்தச் சுவரைப் பழுது பார்க்க முடியா தென்றும், ஜனங்கள் சொல்லுகிறார்கள். இந்த 20-ம் நூற்றாண்டில் இதுவும் ஓர் ஆச்சரியமே.

மேலே சொன்ன மெக்கன்ஸி துரை கைபீதில் பின்வருமாறு எழுதியிருக்கிறது: "அதற்கு (ஏராளமான புதையல்கள் இருக்கிற தென்பதற்கு) ருசுவாக நூறு வருஷத்துக்கு உள்ளாகத்தானே ஐயாவையன் அன்னுபேருள்ள பிருமணன் அந்த ஊரில் திரவியங்கள் கண்டு எடுத்ததாகவும் அதை தஞ்சை நகரம் ராஜா தெரிந்து கேள்வியாய் விசாரித்து அந்த ஐயாவையனை சமாதானமாக இராஜ்ய அதிகாரமும் கொடுத்து அந்த பிராமணன் மனசுபடியாய் திருவெண்காடுகோயில் திருப்பணி தருமத்துக்காகவும் மற்றும் பல இடங்களில் பலவித தருமங்களுக்காக அந்த திரவியங்கள் செலவுபண்ணினது அல்

லாமல் இராஜா பொக்கிஷத்தில் திரவியம் போட்டதாக வெகு நாளாய் சொல்லிக் கொள்ளப்படுவதினுல் அமரசிங்க மஹாராஜா அவர்கள் நாளேயிலும் அப்பேர்பட்ட திரவியம் இருக்கிறதாய் கேள்விப்பட்டு மந்திரிமார்கள் கூட போய் அந்த இடத்தை சோதனே பண்ணி......................"

மேற்சொன்ன ஐபாவையன் கதையில், எவ்வளவு நிஜம் இருக்கிறதென்றும், எவ்வளவு நாளடைவில் சேர்ந்து இருக்கிறதென்றும் சொல்வது கஷ்டம். மேற் சொல்லப்பட்ட தானங்களும் மற்றச் செயல்களும் உண்மை யென்றே தோன்றுகிறது. அவர் சாபத்தினுல் மணியும் சுவரும் விழுந்தன வென்று நம்பமுடியாமற் போனுலும், கட்டாத மணியையும், மொட்டைச் சுவரையும், இப்பொழுதும் எல்லோரும் பார்க்கலாம். அப் பெரியவர் காலத்தையும் வேலேயையும் பற்றி விபரமாய் எழுதுவதற்கு இது இடமில்லே.



## "சுதந்திரத் தொட்டில்"

### ஒரு சுயேச்சை நாட்டின் வரலாறு

(10-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

ஸ்ரீ. அ. மாதவையர், சென்னே



வ்வண்ணம் ஒரு கடியாரத்தைச் செய்து முடித்தபின் நியூச்சாட்டல் என்ற மலேப் பிரதேச வாசியான அக் கொல்லன், தன் வீட்டில் ஒரு கடியாரத் தொழிற் சாலேயை ஏற்படுத்தி, நாளுக்கு நாள் தான் வேலேயில் திறமையடைவதோடு, தன் மக்களேயும் வேறு பல வாலிபர்களேயும் கடியார வேலேயில் பழக்கிவந்தான். இப்பொழுது அந்தப் பிராந்தியங்களில் சென்றுல், சாலியத் தெருக்களில் வீடு வீடாய் நெசவு தொழில் நடப்பது போல, ஊர்தோறும் வீடுதோறும் கடியார வேலேயே நடந்து வருவதைக் காணலாம்.. நாளாவட்டத்தில், சுவிச்சர்லாந்து முழுதும் இத் தொழில் பரவி, ஆண்டுதோறும் பல்லாயிரக் கணக்கான தொழிலாளிகள் பல லக்ஷம் கடியாரங்களேப் பலவேறு விதங்களில் செய்து, உலகெலாம் விலேக்கு அனுப்பி வருகின்றனர்.



1876-ம் ஆண்டிலே அமெரிக்காவி லுள்ள பிலடெல்பியா நகரத்திலே, ஒரு பெருங் காட்சி நிகழ்ந்தது. அப்பொழுது அவ்விடத்தில் புதுமாதிரியான வேலேப் பாடுகளேயும் சூக்ஷமங்களேயும் சென்று கண்ட இந் நாட்டுத் தொழிலாளிகள், தம் நாடு மீண்டவுடன், பழைய மாதிரிகளேயும் முறைகளேயும் கைவிட்டு, வீட்டில் அவரவரே வேலே செய்வதைப் பெரும்பாலும் தவிர்த்து, மிகப் பெரிய கடியாரத் தொழிற்சாலேகளேப் பல விடங்களில் ஏற்படுத்தி, கடியார வேலே கற்றுக்கொடுப்பதற் கென்றே பல தொழிற் கல்விச் சாலேகளேயும் ஸ்தாபித்து, இவ் வேலேயில் மற்றெந் நாட்டாருக்கும் தாம் பின்னிடாதபடி, தம் தொழிலேச் சீர்திருத்தி யமைத்துக் கொண்டனர். இப்படிப்பட்டவர் செல்வஞ் செழித்து மேன்மை யடைதல் அதிசயமன்றே. இப்பொழுதோ, இந் நாட்டிலே 36 ஆயிரம் ஆண்களும், 60 ஆயிரம் பெண்களும், கடியார வேலேசெய்து வருகின்றனர். பொன், வெள்ளிக் கூடுகளேயுடைய கடியாரங்கள் மாத்திரமே, ஏறத்தாழ 38 லக்ஷம், ஆண்டுதோறும் செய்யப்படுகின்றன.

இந்நாட்டார் விவசாயத்திலும், நகைகள் செய்வதிலும், எனுமல் வேலேயிலும், வெள்ளிப் பாத்திரங்கள் விசித்திரமாய்ப் பண்ணுவதிலும், சங்கீத வாத்தியப் பெட்டிகள் செய்வதிலும், பட்டு, கம்பளி நெசவுகளிலும், மின்சார சக்தியாலும் இதர சக்திகளாலும் அற்புதமான என்ஜிநீயரிங் வேலேகளேச் செய்து முடிப்பதிலும், பேர்போனவ ராவர்.



இந்நாட்டு இடையன்

இவற்றினும் மேலாக, நாம் இந்தியாவில் வாங்கிவரும் ஒரு வகைப் பண்டம், இவர் கைத் தொழிலேயாம். அதாவது, 'கண்டென்ஸ்ட் மில்க்' என்னும் பால் புட்டி, நெஸ்ட்லீஸ் பூட், முதலியபால் பண்டங்கள். சுத்தமான நயமான பண்டங்களே யே உண்டாக்கி விற்று, மும்முரமாய் விளம்பரம் செய்வதால், இந்நாட்டுப் பாலுணவுப் பொருள்கள், உலகெலாம் பிரசித்து பெற்று வழங்குகின்றன. இந் நாட்டில் சில பிரதேசங்களில், பால் வண்டிகள் நாய்களால் இழுக்கப்படும்.

ஐரோப்பா கண்டத்திலுள்ள பெரிய ஆறுகளில் மூன்று—ரோன், ரைன், இன்—இந் நாட்டுப் பனி மலைகளில் தான் உற்பத்தியாகின்றன. இவையன்றி, புகைக் கப்பல்கள் செல்லக் கூடிய பெரிய ஏரிகளும் இந் நாட்டிலுண்டு. ரெயில் வண்டிகள் ஏற்படுமுன், இந் நாட்டார், நீர் மார்க்கமாகவே பெரும்பாலும் வியாபாரஞ் செய்து வந்தனர். யுக்தியிற் சிறந்த பாலங்களைக் கட்டுவதில், இவர் அதிசமர்த்தர்.

இந்நாட்டார் பெரும்பாலும் குடியானவர்களே. பெண்பாலார் ஓயாமல் உழைத்துத் தம் வீடுகளை வெகு சுத்தமாய் வைத்துக் கொள்வதுமன்றி, குடும்ப நிருவாகத்தைச் சிக்கனமாயும் திறமையோடும் நடத்திவருகின்றனர். குடும்பப் பாரமெல்லாம்



இந்நாட்டில் ஒரு பெண்

தங்கள் மேல்தான் பொறுக்கிறதென்று, ஆண் மக்கள் மீது இவர்கள் குறை கூறுவதுமுண்டு. இந்நாட்டாரின் குடும்ப வாழ்க்கை விவரங்களையும், பொழுதுபோக்கு விளையாட்டுக்களையும், பழக்க வழக்கங்களையும், கலைப்பயிற்சி, இலக்கியப் பயிற்சிகளையும் எடுத்துக்

கூறினால், இவ் வியாசம் பெருகி விடுவது மன்றி, பொதுவாய் ஐரோப்பியரின் வாழ்க்கை முறைகளை நன்கறியாத தனித் தமிழ் மக்களுக்கு அவ்வளவு ருசிக்கா தாகையால், நமக்குப் பயன் தரக் கூடிய இந்நாட்டாரது கல்வி போதனை முறையையும், துரைத்தன முறையையும் மாத்திரம் சுருக்கிக் கூறி, இதை நிறுத்திவிடுகிறேன்.

சுவிச்சர்லாந்தின் கல்வி போதனை முறை நம்மால் கவனிக்கத் தக்கது. "'குடியரசு', 'குடியாட்சி' 'பொதுஜன நாயகம்' என்பது, பேருக்கு மட்டும் வார்த்தையில் மாத்திர மன்றி, உண்மை யில் நடைபெறுவது, உலகத்திலே இந்த ஒரு நாட்டில்தான்; ஏனெனின், மகாஜனங்கள் பலரும் மேலான படிப்பும் அறிவும் வாய்ந்துள்ள ஜன சமூகத்திலேதான், அது சாத்தியமாகும்; அப்ப டிப்பட்ட ஜன சமூகம், உலகத்திலே இந்த ஒரு நாட்டில் தான் இருக்கிறது" என்று, ஓர் ஆசிரியர் கூறியிருக்கிறார். மற்றொருவர், 'சுவிச்சர்லாந்தினர் பிறவியில் உபாத்திமார்கள்; உலகமெங்கும், இந் நாட்டினர் போராசிரியர்களாயும், உபாத்திமார் உபாத்தினிகளாயும், குழந்தைகளைப் பாதுகாத்து வளர்க்கும் உபாத்திமைத்-தாதிமாராயு மிருப்பதைக் காணலாம்' என்கிறார்.

சாதி, மதம், பிறப்பு, அந்தஸ்து முதலியவற்றால் பிற நாடு களில் விளையும் ஏற்றத் தாழ்வுகள் எதுவு மின்றி, எல்லார்க்குள்ளும், சரி சமத்துவம் இந்நாட்டில் நடைபெறுகின்றது. இச் சிறு நாடு, 22 (உட்பிரிவு ஜில்லாக்கள்) கான்டன்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கான்டனும் தனக்குள் சுபாதீனம் பெற்றுத் தன் காரியங் களைத் தானே நிர்வாகஞ் செய்கிறது; சில விஷயங்களில் மட்டும் (Federal Government) என்னும் (22க்கும் பொதுவாய் மேலான) குடியாசாங்கச் சபையின் அதிகாரத்துக்குட் பட்டு வாழ்கின்றது. 1874-ம் ஆண்டிலே, இப் பொதுச் சபை, ஒரு சட்டத்தை ஏற் படுத்திற்று. அதன்படி (1) ஒவ்வொரு கான்டனும், தன் எல்லைக் குட்பட்ட ஆண் பெண் எல்லோருக்கும், இலவசமாக, போதுமான ஆரம்பக் கல்வியை, கட்டாயமாக்கிப் படிப்பிக்க வேண்டும்; (2) மாணவர் எந்த மதத்தைச் சேர்ந்தவராயினும், தமது மதக் கோட்பாட்டுக்கும் மனச் சாக்ஷிக்கும் விரோதமின்றிக் கல்விகற்கும் படி, மேல்தர பள்ளிக்கூடங்கள் நடைபெற வேண்டும். (3) எந்தக் கான்டனாவது இதில் தவறினால், தண்டனைக் குள்ளாகும். இந்தச் சட்டத்தினால், நாட்டில் எல்லாரும் கல்விப் பயிற்சியைக் கட்டாயம் பெறுவதோடு, ஒவ்வொரு கான்டனும், தன் சக்திக்கும் அவசியத் துக்கும் தனக்குள் நடைபெறும் கைத்தொழில்கள் ஜீவனோபாயங் களுக்கும் ஏற்றவாறு கல்வி போதிக்கும் சுதந்திரத்தையும் பெற்று, அவ்வாறே கல்வி போதித்து வருகின்றது. கட்டாயமும் சுயாதீன மும் கலந்து நிகழ்கின்றன.

குழந்தைகள் பள்ளிகள் :— மூன்று வயதிலேயே சிறுவர் சிறுமிகள் இப்பள்ளிகளுக்கு அனுப்பப்பட்டு, "ப்ரோபல்" முறைப்படி பயிலுகின்றனர். பள்ளிக்கு வரும் ஒவ்வொரு குழந்தையின், உடலும் ஆடையும் சுத்தமாயிருக்க வேண்டும். இல்லாவிடின், வீட்டுக்குத் திருப்பி அனுப்பப்படும்; தாய் தந்தையர் குளிப்பாட்டி, சுத்தவுடை யுடுத்திப் பள்ளிக்கு மீண்டும் அனுப்பவேண்டும். குழந்தைகளின் மனோ சக்தியும், ஊக்கமும், உழைப்பும், இப்பள்ளிகளில் வெகு ஜாக்கிரதையாய்ப் பேணி வளர்க்கப்படுகின்றன. தற்காலத்து மனோ தத்துவ சாஸ்திர மேதாவிகளின் போதனைப்படியே இவை நடைபெறுகின்றன. சரீரத்தை வளர்த்துப் பலப்படுத்தும் அப்பியாசங்களும், சன்மார்க்க சம்பாஷணைகளும், கணக்கு வாசிப்பு கையெழுத்து டிராயிங் முதலிய பாடங்களும், ஒவ்வொரு குழந்தையும் தானாகவே யோசித்துப் பார்த்துக் கிரகித்துக்கொள்ளும் முறையில், கற்பிக்கப்படுகின்றன. அழகான பொருள்களையும் நல்ல விஷயங்களையும் தாமே உணர்ந்து ஆசைகொள்ளும் இவ்விடங்களுக்குக் குழந்தைகள் குதூகலத்தோடு மனமகிழ்ந்து செல்கின்றன.


இந்நாட்டு வேடர் மரங்களின் மூலமாய்த் தாண்டுதல்

பள்ளிக்கூடங்கள் :— ஆறு வயது முதல் பதினைந்து வயது நிறையும் வரை, ஒவ்வொரு சிறுவனும் சிறுமியும், ஒரு பள்ளிக்கூடத்திலோ வீட்டிலோ போதுமான அளவு கல்வி பயின்று தீரவேண்டும். "போதுமான அளவு கல்வி" என்பதில், படித்தல், எழுதுதல், டிராயிங், இலக்கணம், கணக்கு, அடிப்படையான இயற்கை சாஸ்திரம், பௌதிக சாஸ்திரம், பாட்டு, சரீரப் பயிற்சி, இவ்வளவும் அடங்கும்; இவையன்றி, சிறுவர்கள் தச்சுத் தொழில் முறைகளும், சிறுமிகள் தையல் வேலையும் கற்பிக்கப்படுவர். இப்படிக் கல்வி பயிலத் தவறினவர், 50 பிராங்க் வரை அபராதத்துக்கும், சிறைச்சாலைக்கும் உள்ளாவர். அயல் நாடுகளிலிருந்து வந்து இந்நாட்டில் வாழும் அன்னியரும், இச்சட்டப்படி படித்துத் தீரவேண்டும்; இல்லாவிடின், காண்டனைவிட்டு வெளியேற்றப்படுவர். இந்நாட்டிலே, செல்வர்கள் ஏழைகள், உயர்ந்தோர் தாழ்ந்தோர், என்ற வித்தியாசமின்றி, எல்லோர் பிள்ளைகளும் பள்ளிக்கூடங்களில் சேர்ந்து படிப்பதைக் காணலாம். தங்கள் மக்களைப் பதினைந்து வயது நிறையும் வரையும் பள்ளிக்கூடங்களில் விட்டிருக்க முடியாத ஏழைகளின் மக்களுக்காக, துணைப் பள்ளிக்கூடங்களிருக்கின்றன. இவை, வேலையாட்கள் வேலை செய்யும் வேளைகள் தவிர மற்ற நேரங்களில் நடைபெறும். 13-க்கு மேல் 16 வரை, தம் மக்களை வேலைகளுக்கு ஜீவனோபாய நிமித்தம் அனுப்பும் பெற்றோர்கள், அவர்களை, ஒழிந்த நேரங்களில் இந்தப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பித் தீரவேண்டும். வேலைகளுக்குச் சென்றுள்ள ஏழைப் பெற்றோர்களின் குழந்தைகளைப் பராமரித்து, விளையாட்டுக் காட்டி, அறிவூட்டி, வேண்டுமாயின் உணவும் அளிப்பதற்கென்று, வேறு ஏற்பாடுகளுமுண்டு. இவ்வண்ணம் ஐந்தாண்டுகள் படித்த பின்பு, யோக்கியதா பத்திரம் கொடுக்கப்படும்; அதைப் பெற்றுக்கொண்டு மேலான கலாசாலைகளில் சேர்ந்து படிக்க முடியாதவர்க் கென்றே, மாலை நேரத்தில் பாடஞ் சொல்லும் வகுப்புகளு முண்டு.

பெண்கள் பள்ளிக்கூடங்கள் :— இவை வெகு செம்மையாய் நடைபெறுகின்றன. இவற்றில், பெண்கள், உலக சரித்திரம், இலக்கியம், இயற்கை சாஸ்திரங்கள், தற்காலப் பாஷைகள், உபயோகமாகும் கணக்கு, முதலியவற்றைப் படிப்பர். இவை பொதுவானவை. வேறு பல பள்ளிக்கூடங்களில், பெண்களுக்குபயோகமான தொழில்கள் கற்பிக்கப்படுகின்றன. இதே மாதிரியான தொழிற் பள்ளிக்கூடங்கள், பிள்ளைகளுக்கும் உண்டு.

தொழிற் பள்ளிக்கூடங்கள் :— இவற்றில், மேலான கலைகளைப் பயிலும் உயர்தர மாணவருக்கு, இன்றியமையாத கணித சாஸ்திரம், ஓவியம், இதர சாஸ்திரங்கள் முதலியன போதிக்கப்படுகின்றன. தொழிலாளிகளுக்குத் தம் தொழிலும் கைப் பழக்கமும் தான் வேண்டுமென்பதின்றி, இந்நாட்டிலே, தொழிலாளிகளின் உயர்தரப் பயிற்சி நன்கு கவனிக்கப்படுகின்றது. இந்நாட்டுத் தொழிற் கலாசாலைகளில் பயின்று தேர்ந்தோர பல நாடுசென்று கியாதியுடன் விளங்குகின்றனர். ஸூரிச் கலாசாலையில் தேர்ந்த என்ஜினீயர்கள் உலகப் பிரசித்தி பெற்றவர்.

சர்வ கலாசாலைகள் :— சென்னை மாகாணத்தில் பத்திலொரு பங்கே யுள்ள இச்சிறு நாட்டிலே ஐந்து சர்வ கலாசாலைகளும், கியாதிபெற்ற கலா சங்கங்களும் இருக்கின்றன. இவற்றில் பயிலும் உயர்தர வித்தியார்த்திகளில், மூன்றிலொரு பகுதி, பெண் மக்களாவர். கணித சாஸ்திரம் பௌதிக சாஸ்திரங்களில் இந்நாட்டார் புதிதாய்க் கண்டுபிடித்து உதவிய தத்துவங்கள் பல. பிராண வாயு (Oxygen) வைத் திரவப் பொருளாக்கும் யுக்தி இந்நாட்டு மேதயர் கண்டு பிடித்ததாம். ஆயிரக் கணக்கான மாணவர் வேறு நாடுகளி

லிருந்து வந்து,இந்நாட்டுச் சர்வ கலாசாலைகளில் கல்வி பயின்று வருவதே, இவற்றின் சிறப்பை விளக்கும்.

போஜன வசதியுள்ள பள்ளிக்கூடங்கள் :— இவை பெரும்பாலும் அயல் நாட்டு மாணவர்களுக்கே உபயோகமாகின்றன. இவற்றில் தங்கிக் கல்வி பயிலுவோர், விளையாட்டு வேடிக்கைகளும், கூத்துக்களும் சங்கீதக் சச்சேரிகளுமாக, பள்ளிக்கூடப் படிப்பின் கட்டுப்பாடுகளை உணராமலே, காலங் கழித்து வருவர்; ஆயினும், கல்விப் பயிற்சியை அசட்டை செய்வதில்லை; அதுவும் போதிய அளவு நடந்துகொண்டே வரும். இவற்றில் இரண்டு மூன்று வருஷங்கள் கல்வி பயின்று தம் சொந்த நாடு மீளும் வித்தியார்த்திகள், தாம் கற்க வந்த கல்விமட்டு மன்றி, இரண்டு மூன்று பாஷைகளில் நன்கு சம்பாஷிக்கத் தெரிந்திருப்பர்; உலக வாழ்க்கையிலே மிக உபயோகமாகும் அநுபவ ஞானமும் அதிகம் பெற்றுத் தேர்ந்திருப்பர்.

இனி இந்நாட்டுத் துரைத்தன முறையைப்பற்றிச் சுருக்கிக் கூறுவேன்.


இந்நாட்டில் ஒரு வீடு

இந்நாட்டிலே, நிலையான காவற் சைனியமென்பதில்லை; ஆயின், ஒவ்வொரு ஆண் பிள்ளையுமே படை வீரன் என்னலாம்; பள்ளிக்கூடங்களில் தானே அவ்வாறு பயிற்றப் படுகின்றனர். ஒவ்வொரு மாணவனுக்கும் படைப் பயிற்சி, எட்டு வயதுமுதல் கட்டாயமாகப் போதிக்கப்படுகின்றது. இச் சிறு நாடு 22 கான்டன்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறதென்று சொன்னேன். ஒவ்வொரு கான்டனையும், சர்வ சுதந்தரங்களுடன் தன் காரியங்களை யெல்லாம் தானே அமைத்துப் பராமரித்துவரும் ஒரு கிராமம், அல்லது ஒரு கம்பெனிக்கு ஒப்பிடலாம். இவற்றில், மிகப் பெரியது 2773 சதுர மைல் விஸ்தீரண முள்ளது; மிகச் சிறியது 9? சதுர மைல் விஸ்தீரணமே யுள்ளது. இந்த 22 கான்டன்களும் சேர்ந்தது சுவிச்சர்லாந்தாகும்; இவற்றின் ஒவ்வொன்றையும் தனியாட்சி யென்றும், மொத்தஞ் சேர்ந்ததை, கூட்டாட்சி யென்றும் கூறலாம்.

சிறியதோ பெரியதோ, ஒவ்வொரு கான்டனுக்கும் தனித் தனியே நிர்வாக சபை, சட்ட சபை, நியாய சபைகளுண்டு. 22 கான்டன்களும் கூடிய கூட்டாட்சித் துரைத்தனத்தில், கான்ட



னுக்கு இருவராக 44 பிரதிநிதிகள் சேர்ந்த ஸ்டேட் கவுன்ஸில் ஒன்றும், மொத்தம் ஜனத் தொகையில் 20,000 பேருக்கு ஒரு பிரதிநிதி வீதம் தேர்ந்தெடுக்கப்பட்ட 167 அங்கத்தினர்களுள்ள நாஷனல் கவுன்ஸில் ஒன்று முண்டு. இவ்விரு கவுன்ஸில்களுஞ் சேர்ந்து, கூட்டாட்சி நிர்வாக சபைபாராக (Federal Executive Council) 7 பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கும். இவ் வண்ணம் தெரிந்தெடுக்கப்பட்டோர் எழுவரும், 3 வருஷம் பரிபாலனஞ்செய்வர். இச்சபைத் தலைவர் (President) நமது கவர்னருக்குச் சமானராவர்; ஆனால் இவர் பெறும் மாதச் சம்பளமோ, நம் நாட்டிலே ஒரு ஸப் ஜட்ஜின் சம்பளமே யாகும். இந்நாட்டு ராஜிய நிபந்தனைகளில் சிலவற்றைக் கூறுவேன்.

நாட்டில் வாழ்வார் எல்லோரும் சட்டப்படி சரி சமானரே. ஒவ்வொருவனும் வேண்டியபோது நாட்டுக்காகப் போர் புரியக் கடமைப்பட்டவனே. படை வீரர்களைப் பழக்கி, ஆடை ஆகாரம் ஆயுதங்கள் முதலியன அவர்களுக்கு உதவுதலும்,போர்த்தொழிலில் காயப்பட்டவர்கள், அல்லது இறந்தவர்களின் குடும்ப சம்ரக்ஷணைக்கு வேண்டியபடி பென்ஷன் கொடுப்பதும், கூட்டாட்சியார் கடமையாகும். கட்டடங்கள், ரஸ்தாக்கள், தபால் தந்தி இலாகா, இவையெல்லாம் துரைத்தனத்தாரே பராமரித்து வருகின்றனர். சுங்க வரி விகிதத்தில், அத்தியாவசிய மில்லாத போகப் பொருள்கள் (Luxuries) அதிக வரி கொடுக்க வேண்டும். உப்பும் வெடி மருந்தும் துரைத்தன மானியங்கள். துரைத்தனத்தையோ சட்ட சபைகளையோ சேர்ந்த எவனுமே, பிறநாட்டு இராசாங்கத்தாரிடமிருந்து பணமோ, வெகுமதிகளோ, பட்டங்களோ, எதுவும் பெற்றுக்கொள்ளக் கூடாது. எவனும் எம் மதத்தையும் தன் மனச்சாக்ஷிப்படி அநுஷ்டிக்கலாம்; ஆயின் ஜெஸ்யூட்டுக்கள் என்ற ரோமன் காதோலிக் பாதிரிகளும் அவர்களைச் சேர்ந்தோரு மாத்திரம், நாட்டிலே வேரூன்றவோ, தேவ ஸ்தாபனங்கள் கலாசாலைகளில் சம்பந்தப்படவோ, விடுவதில்லை. நாட்டுக்கு விரோதமான எந்தச் சங்கத்தையும் துரைத்தனத்தார் தொலைத்து விடலாம். பத்திரிகைகளுக்குச் சர்வ சுதந்திரமுண்டு; ஆயின், அதிக்கிரமித்து நடந்தால், கூட்டாட்சியார் தண்டனை விதிப்பர். தேவஸ்தாபன விஷயங்களுக்கென்று பிரத்தியேகமான நியாய சபைகள் இல்லை. இந்நாட்டிலே மரண தண்டனையும், கடனுக்காகக் கைதி செய்வதுமில்லை. நாட்டுக்குத் தீங்கு விளைக்கக்கூடிய அன்னியர்களைத் துரைத்தனத்தார் வெளியேற்றி விடலாம். ஹை கோர்ட்டுக்குச் சமமான பெரிய நியாய சபையின் அதிபதிகள், சட்ட சபை அங்கத்தினர்களி லிருந்து வோட்டுப்படி தெரிந்தெடுக்கப்படுவர். ஜூரி முறைப்படி விசாரணைகள் நடக்கும். சட்ட சபையிலே நிறைவேறின சட்

டங்களைமாற்ற,முப்பதினுயிரம் பொது வோட்டர்களேனும், அல்லது, 8 கான்டன்களேனும், கூடி விரும்பினல், மீண்டும் பொது ஜன அபிப்பிராயத்தை அறிந்து, அதன்படியே நடக்கவேண்டும். 167 மெம்பர்களடங்கிய சட்ட சபையை, மகா ஜனங்களே நேரில்



ஜெனிவா நகரம்

வோட்டுக் கொடுத்துத் தெரிந்தெடுப்பர். மேற்கூறிய கவுன்ஸில்கள் இரண்டும் சேர்ந்து, ஆண்டுதோறும் பேர்ந் நகரத்தில் கூடி, ஜன நாயகரை (President — கூட்டாட்சி நிர்வாக சபையின் தலை



வர்) தெரிந்தெடுக்கும். அத் தலைவர் ஓராண்டே வேலை பார்ப்பர்; அடுத்த வருஷம் மீண்டும் தேர்தல் நிகழும். தெரிந்தெடுக்கப்படும் மற்ற உத்தியோகஸ்தர் சட்ட சபையார் முதலியோர் 3 வருஷங்களுக்கு வேலை பார்ப்பர். சட்ட சபையார், நிர்வாக சபையார், எல்லோருக்கும் சம்பள முண்டு; ஆனல் வெகு சொற்பமா யிருக்கும். ஜன நாயகராகவோ, உப-ஜனநாயகராகவோ, இரண்டு வருஷங்களுக்கு, அடுத்தாற்போல் ஒருவரையே தெரிந்தெடுக்கக் கூடாது; இத் தலைவர்கள் ஆண்டுதோறும் மாறுவர். சட்ட சபை நடவடிக்கைகள் பகிரங்கமாயே நடக்கும். எந்தக் கான்டனும் தனக்கு உசிதமாய்த் தோன்றும் சட்டத்தை ஆலோசனைக்குக் கொண்டு வரலாம். வோட்டுக்களின் மிகுதிப்படியே தீர்மானமாகும். இந் நாட்டுத் துரைத்தனத்தார் கடன் வாங்குவ தில்லை. பிறநாடுகளிலிருந்துவந்து விபாபார நிமித்தம் இந்நாட்டில் பிரயாணஞ் செய்வோர் ஒவ்வொருவரும், பணங் கொடுத்து லைசென்ஸ் பெறவேண்டும். ஒரு கான்டனில் வசிக்கும் ஒவ்வொருவனுக்கும், அந்தக் கான்டன் தனியாட்சியில் செல்வாக்குண்டு. கான்டன்களுக்குச் சொந்தமான காடுகள், பூமிகள், வீடுகள், வரிகள் முதலிய சொத்துக்களுண்டு. அவற்றிலிருந்து வரும் வருமானத்திலிருந்து, இலவசக் கல்வி, புஸ்தக சாலைகள், வரிகளைக் குறைத்தல், தருமங்கள், முதலியன அமைப்பர். "கான்டன் வாசி" என்னும் உரிமை, பரம்பரையாய் வரும்; புதிதாய் வேண்டுவோர் பணங் கொடுத்துப் பெற வேண்டும்; இவ்வுரிமையின் விலை மதிப்பு, கான்டனுக்குத் தக்கபடி, குறைந்தும் கூடியுமிருக்கும். சில கான்டன்களில், என்ன பணங் கொடுத்தாலும், அந்நியர், இவ்வுரிமையை விலைக்கு வாங்க முடியாது. கான்டன் வாசிகளில் பரம ஏழைகளாகி விட்டவர்களை, அந்தக் கான்டன் பொதுப் பணத்திலிருந்து போஷித்துக் காப்பாற்றுதல் கடமையாகும். ஏழை ஒருவனுக்கு மக்கள் பலர் பிறந்து, அவனல் அவர்கள் எல்லோரையும் பேணி வளர்க்க முடியாமற் போனல், அந்தக் கான்டனின் தனியாட்சிச் சபைத் தலைவர் (மேயர்), அவ்வேழைப் பிள்ளைகளைப் பராமரிக்கும் கடமையை ஏலத்தில் போட்டு, கான்டன் வாசிகள், மற்றவர்களில் எவன் குறைந்த தொகைக்கு ஏலங் கேட்கிருனே, அவனிடம் அப் பிள்ளைகளை ஒப்படைத்து, கான்டனுடைய பொதுப் பணத்திலிருந்து அவனுக்குக் கொடுப்பர். ஏழைகளைப் பராமரிக்கும் வேலை, இவ்வாறு ஏலத்திலவிட்டு ஒப்படைக்கப்படும். கான்டனின் பொதுவருமானத்தில் கான்டன் வாசிகள் எல்லோருக்கும் சம பங்குண்டு. எந்த ஆண்டிலேனும் வருமானம் பொதுச் செலவுக்குப் போதுமானபடி ஏராளமாய்க் கிடைத்துவிட்டால், அந்த ஆண்டில் ஜனங்கள் வரி கொடுக்க வேண்டியிராது. கூட்டாட்சித் துரைத்தனத்தால் விதிக்கப்படும் வரிகளு

மே, இப் பொதுப் பணத்திலிருந்து கொடுபடும். ஊரார் ஒன்று கூடியதே கான்டன் தனிபாட்சி; கான்டன் ஒன்று கூடியதே, இச் சுயேச்சை நாட்டுக் கூட்டாட்சி. கான்டன்களின் தனிபாட்சி முறைகள் பலதிறப் பட்டனவாம்: சில கான்டன்களில் பாராளு மன்றங்கள் உண்டு; சிலவற்றில் இல்லை; சில கான்டன் தனிபாட்சிச் சபைகள், மாளிகைகளில் கூடும்; சில, மைதான வெளிகளிலே கூடும்; சில கான்டன் பாராளுமன்றங்களுக்கு எல்லா அதிகாரமு முண்டு; சிலவற்றுக்கு எவ்வதிகாரமு மில்லை.

ஊரி, உண்டர் வால்டன், அப்பென்ஸெல்ஸ் என்ற 3 கான்டன்களின் ஆட்சி முறை விசித்திரமானது. முன்னாட்களில் இம் மூன்று கான்டன் வாசிகளும், ஆண்டுக்கொரு முறை தம் வயல்களின் மத்தியில் கூட்டங்கூடி, தமக்குள் மிக உயர்ந்த (கெட்டையான)வனையே, தலைவனுக்கி, அடுத்த ஆண்டுக்குரிய சட்டங்கள், ஏற்பாடுகள், எல்லாவற்றையும் பேசி முடித்து, அதிகாரிகளையும் நியமித்துவிட்டு, கூட்டம் கலைந்து, அவரவர் தத்தம் வேலைக்குச் சென்றுவிடுவராம். இந் நாளினுமே, மே மாதம் முதல் தேதியன்று, ஊரி கான்டனில், இவ்வண்ணமே நிகழ்ந்து வருகின்றது. அன்று காலையில், அந்தக் கான்டன் வாசிகளும் வோட்டர்களுமான எல்லோரும், கோயில்களில் தேவாராதனை செய்தபின், வாத்திப கோஷம் கொடி தோரணங்களோடு, ஒரு மைதானத்துக்குச் சென்று, அங்கே வயல்களின் நடுவேயுள்ள மேட்டிலே கூடுவர். பிறகு மேயர் வேண்ட, எல்லோருங்கூடிக் கடவுளைப் பிரார்த்திப்பர். அப்பால், மேயர், முக்கிய விஷயங்களை எடுத்துரைப்பர்; காரியதரிசி அவசியமான சட்டப் பிரேரணைகளை வாசிப்பர்: ஆமோதிப்போரும் ஆக்ஷேபிப்போரும் தத்தம் அபிப்பிராயத்தை வெளியிட்டுப் பேசியபின், கையைத் தூக்கியும், தாழ்த்தியும் வோட்டுக்கொடுக்க வோட்டுக்களின் மிகுதிப்படி தீர்மானமாகும். இவ் வண்ணம் வேண்டிய சட்டங்கள் ஆலோசித்து நிறைவேறியபின், அடுத்த வருஷத்து அதிகாரிகள் தெரிந்தெடுக்கப்பட்டு, அப்பொழுதே, ஒழுங்குப்படி உண்மையாய் வேலை பார்ப்பதாகப் பிரமாணஞ்செய்து கொடுப்பர். அப்பால், ஊரிப் பாராளுமன்றம், அடுத்த ஆண்டு வரை கலைய, அவரவர் தத்தம் இருப்பிடம் போய்விடுவர்.

இந்த நாட்டிலே லாகிரி வஸ்துக்களை உண்டாக்கி விற்கும் உரிமை துரைத்தனத்தாருக்கே யுண்டு. அதனால் கிடைக்கும் இலாபத்திலே பத்திலொரு பாகம், அதிகக் குடியினால் தீங்கு நேராமற் காப்பதிலும், பித்தர் ஆசுபத்திரி முதலிய பொது தர்மங்களிலும், செலவிடப் படுகின்றது. ஆப்ஸிந்த் என்னும் சாராயம் அதிகம் தீங்கு விளைப்பதாகலின், அதை யுண்டாக்கி விற்பதே யில்லை. சட்ட சபையாரால் செய்யப்பட்ட எந்தச் சட்டமும், 30000 வோட்டர்



கள், அல்லது 8 கான்டன்கள் வேண்டினால், நாட்டு மகா ஜனங்களின் வோட்டுக்கு உட்பட வேண்டுமென்று மேலே கூறினேன். இந்த நிபந்தனையினால், சட்ட சபைப் பிரதிநிதிகள் மனத்தில் நியாயமாய் நடக்க வேண்டுமென்ற பயமும், மகா ஜனங்களுக்குத் தங்கள் விருப்பத்தை நிறைவேற்றிக் கொண்டு, துரைத்தனத்தாரை அடக்கியாளும் உரிமையும் ஏற்படுகின்றது. பிரதிநிதிகள், மகா ஜனங்களின் அபிப்பிராயத்தைப் புறக்கணித்து நடக்க முயலுவதில்லை. இதனால், இந்நாட்டிலே, உண்மையில், குடியரசே நடைபெறுகின்றதென்று வாய் கூசாது சொல்லலாம். இப்பெருஞ் சிறப்புக்கு அடிப்படையாயிருப்பது, கல்விப் பயிற்சியுள்ள மகா ஜனங்களின் சுதந்திர ஆசையேயாம்.

## ஸம்ஸ்கிருத புஸ்தகசாலைகள்

(68-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

ஸ்ரீ. R. அனந்தகிருஷ்ண சாஸ்திரி,
சாந்திநிகேதனம்.



இந்தியாவிலே புஸ்தகங்கள் விஷயத்தில் ஈனஸ்திதி எப்பொழுது உண்டானதென்று ஒருவராலும் சொல்ல முடியாது. எப்பொழுது ஹிந்து மதத்திற்கு விரோதமான மதங்கள் இந்தியாவில் வந்தனவோ அது முதல் புஸ்தகங்களுக்குத் தாழ்மையும் நாசமும் ஆரம்பித்துவிட்டன. சுமார் 2500 வருஷ காலமாக, புத்த மதம் ஹிந்துஸ்தானத்தில் உண்டாகி, அப்பொழுதிருந்த ராஜாக்களும் அதில் சேர்ந்தவுடன், வெகு பண்டிதர்களும் சாதாரணமானவர்களும் அந்தப் புத்தமதத்தில் சேர்ந்து, தங்களிடத்தி லிருந்த பழைய புஸ்தகங்களை, சுபாவமாக நதியிலாவது அக்கினியிலாவது போடுவது வழக்கம். அவ்விதமாகப் பேரட்ட விஷயத்தைச் சரித்திரங்கள் கூறுகின்றன. பிறகு, துருக்கர்கள் காலம், அது எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. அக்கினிக்கு இரை

யாக வெகு கிராமங்கள் போயின. பிறகு பண்டிதர்களுக்குத் தரித்திர காலம். அவர்கள், சுபாவமாகச் சாப்பாட்டிற்குக் கிடையாமல் வீட்டைவிட்டுத் தேசாந்தரம் போகுங்கால், வீட்டிலிருக்கிற கிருந்தங்களைப் பார்க்க மனுஷியா ளில்லாமல், காலாந்திரத்தில் பூச்சி எலி முதலான ஜந்துக்களுக்கு இரையாகப் போயின. பிறகு அக்கினி, மழை முதலானவற்றின் உபத்திரவம். அனேகமாக வைதிகர் வீடெல்லாம் ஓலை புல் முதலானவைகளினுல் மூடப்பட்டிருப்பதனுலும், அனேகமாக சூரிய சந்திரர்களுடைய பிரவேசமிருப்பதனுலும், அடிக்கடி அக்கினி மழைகளுக்கு இரையாயின. பிறகு அஜ்ஞானம். நமக்கோ சாப்பாட்டுக்குக் கிடையாது : இந்தப் புத்தகங்களை வைத்துக்கொண்டு என்ன பிரயோஜனமென்று அலக்ஷியம்செய்து, குப்பையிற் போடுவது. புஸ்தகங்களைக் குப்பையில் போட்ட விஷயத்தையும், பூமியில் புதைத்த விஷயத்தையும் குறித்து நான் பார்த்ததை யெழுதவேண்டுமானுல், ஒரு பெரிய புஸ்தகம் எழுதலாம். கடைசியில் பிளேக்கின் பலன். எலிக்கும் பிளேக்குக்கும் சம்பந்தமுண்டென்று சொல்லுகிறபடியினுல், எலிக்கு வாஸமும் ஆகாரமும் ஏடுகளும் காகிதங்களுமாகையால், வீடுகளில் பிளேக் வந்தவுடன், குடியிருக்கிறவர்கள் காடுகளுக்கு ஓடிப்போகும்பொழுது, அனேகமாகப் புத்தகங்களை, சுகாதாரக்காரர்கள் மண்ணெண்ணெயை விட்டு அக்கினிக்கு ஓமம் செய்துவிடுவது வழக்கம். புஸ்தகங்கள் குறைவாக விருந்தால், குப்பைக்கு அனுப்புவது முண்டு. 1896-ம்ஹு முதல், விடாமல், தரித்திரப் பிராமணர்கள் வீடுகளுக்கு பிளேக் வந்ததால், தங்கள் ஜீவனைக் காப்பாற்ற வெளியே ஓடும்பொழுது, புஸ்தகங்களை எப்படி ரக்ஷிப்பார்கள் ? அதிலும் சில அபிமானிகள் ரக்ஷித்து வந்திருக்கிறுர்கள்.

இனி நடக்கவேண்டிய விபரம் என்னவெனில் :— புத்தர் கால முதல் சுமார் 2500 வருஷங்களாக விடாமல் புஸ்தகங்களுக்கு இவ்வளவு வியாதிகள் வந்தும், அவ்வளவையும் தப்பிக்கொண்டு, ஏதாவது கால் வாசியாவது நம் புஸ்தங்களிருக்கிற பக்ஷத்தில், இதற்குக் காரணம் நம் பாக்கியமும் ஈசுவர கிருபையுமாகும். ஒவ்வொரு தேசத்துக்கும் அந்நிய மதம் வந்தவுடன், தேசத்தார் மதப் புஸ்தகங்களும் அவர்கள்கூட (நசித்துப்) போகிறது வழக்கம். நம் பரத கண்டமானது அப்படி யிருக்கிறதாகத் தெரிய வில்லை. மத விரோதிகளும் யவனர்கள் (Greek) கால முதல் சுமார் 2000 வருஷங்களாக விடாமல் நம் தேசத்தை வியாபித்து வெகு முயற்சி செய்தும், இன்றைக்கும் ஜகத்தில் மூன்றிலொரு பங்கு ஹிந்துக்களாகவே யிருக்கிறுர்கள். நாம் மத ரக்ஷணைக்காக ஒரு பைசாவாவது, சுவல்ப புத்தியையாவது, செலவு செய்கிற தில்லை. இதற்கும் காரணம் சொல்லவேண்டும்.



1896ஹுத்தில் ஒரு ஜர்மெனி தேசத்து மஹா வித்துவான் ஒரு லிஸ்டு எடுத்தார். அதற்கு "காடலாக்ஸ் காடலாகோரம்" என்று பெயர். அதில் சுமார் 8000 புஸ்தகங்களின் பெயரிருக்கிறது. இரகுவம்சம் என்றுல், அது ஒரு புஸ்தகம் ; அதில் 10 பிரதிகளிருந்தால், 10 புஸ்தகங்களாகாது. இரகு வம்சம் வியாக்கியானம், மல்லிநாதரது, ஒரு புஸ்தகம் ; அப்படியே கணக்குப் பார்க்கவும். ஏனென்றுல், இந்தக் கணக்குத் தெரியாதவர்கள், தஞ்சாவூர் லைப்ரரி அடையாறு லைப்ரரி மதராஸ் கவர்மெண்டு லைப்ரரி முதலானவைகளில்,ஒவ்வொன்றிலும் 20,000 இருக்கிறதே யென்று உடனே சொல்லுவார்கள். புஸ்தகங்களின் கணக்கு (No.) 20000 சரி. இரகுவம்சத்தில் 20—30 காபிகளிருக்கும் ; அப்படியே, அதின் மல்லிநாதன் வியாக்கியானமும் ; கணக்குப்படி, இரண்டு புஸ்தகங்கள்தான். நம் பெரியோர்கள் எழுதியதை, இப்படி சாஸ்திரீயமாகப் பார்த்தால், வேதம் முதல் இன்று வரை எழுதிய புஸ்தகங்களின் கணக்கு சுமார் 15,000—20,000 வரலாம். அதில் சுமார் 10,000 வரை, கண்டுபிடித்து லைப்ரரிகளிலும் வித்வான்கள் வீடுகளிலும் சேகரிக்கப்பட்டு வைத்திருக்கிறது. அதில் பாதிக்குமேல் முக்கியமான புஸ்தகங்கள் அச்சாகிவிட்டன. பாக்கி இன்னும் அச்சாக வேண்டும். இப்பொழுது சேகரித்து வைத்திருக்கிற புஸ்தகங்களுக்கும், நல்ல பழைய காபிகள், அந்தந்தக் கவிகள் எழுதிய காலத்திலிருந்தவை, வேண்டும். அப்படி யிருந்தால்தான், அபத்தமில்லாமல் பாட சோதனைகள்செய்து திரும்பவும் அச்சிட முடியும். திருஷ்டாந்தமாக :— தைத்திரீய உபநிஷத் பாஷ்ய வியாக்கியானத்தில், ஆனந்தகிரியார், வெகு ஆசாரிய பக்தராக இருந்தும், 'தஸ்யப் பிரியவேவசிர' என்ற இடத்தில், பாஷியத்தின் கீழ் பாஷியக்காரர் உளறினதாகத் தெரிய வருகிறதென்று, அச்சில் காணப்படுகிறது. ஒருக்காலும் இப்படி யிருக்கமாட்டாது ; ஆகையால் பரிசோதிக்கப் பழைய புஸ்தகங்கள் வேண்டும். ஒருவர் எழுதிய புஸ்தகங்களை அனேகர் எழுதிப் படித்து, அவைகளை 500 வருஷங்களுக்குப் பிறகு அச்சுப்போட ஆரம்பித்தால், முதலில் எழுதினவர் புஸ்தகம் அடியோடே மாறுகிறது வழக்கம். ஆகையால், சோதிக்கப் பழைய ஏடுகள் சம்பாதிக்க வேண்டும் பிறகு இதுவரை அகப்படாத புஸ்தகங்கள் விஷயத்தில், ஜாஸ்தி சிரமம், எடுத்துக்கொள்ள வேண்டும். இனி 4000 அல்லது 5000 கிரந்தங்கள் பரத கண்ட பூமியில் பதுங்கிக் கிடக்கின்றன. இதைக் கண்டுபிடிக்கிறதுதான் சிரமம். புஸ்தகமும் புஸ்தக வித்தையுமிராவிட்டால், ஒரு மதத்திற்கும் கௌரவம் கிடையாது. இப்பொழுது நமக்குள்ள கௌரவம் வித்தையை வைத்தே தவிர வேறில்லை. எவ்வளவு அபிமானிகளோ ராஜ்ய விஷயத்திற்காக ஜயிலைக்கூட லக்ஷியம் செய்யாமல்

கஷ்டப்படுகிறார்கள். மதப் புஸ்தகங்களுக்காக கஷ்டப்படுகிற வர்கள் ஒருவரையுங் காண வில்லையே! ஈசுவரனே! புஸ்தகங் களுக்கு அலைகிறது சிரமம். ரயில், மோட்டா ரில்லாத கிராமங் களுக்கு நடந்து போகவேண்டும். புஸ்தகங்கள் வைத்திருக்கிற சில மூர்க்கர்களை திருப்தி செய்யவேண்டும். இன்னும் அனேக விக்கினங்கள் உண்டு. அவற்றைத் தாண்டவேண்டும். இது நம் பிராமணர்கள் கடமை. இந்தப் புஸ்தகங்களில் அபிமான முள்ள ஜர்மெனி தேசத்துப் பண்டிதர்கள், நாம் ஒத்தாசை செய்கிற பக்ஷத்தில், கிராமம் கிராமமாக வரத் தயாராக இருக்கிறார்கள். யுத்தத்திற்குப் பிற்பாடு அவர்கள் இவ்விடம் வரக்கூடாததினால் தவித்துக்கொண் டிருக்கிறார்கள். நமக்கோ, கொஞ்சம்கூடத் தாபங் கிடையாது. சிலர் சொல்லுகிறதாவது :— நாமோ ஒரு பிரவிருத் தியும் செய்கிற தில்லை. ஆகையால் அவர்களுக்குக் கொடுக்கிறதே உசிதம்'' என்பது. இதற்குப் பதில், ''இது, நபும்ஸகன் தன் பாரியையைப் பிறருக்குக் கொடுப்பதுபோல் ஆகும்'' என்பதே.

முடிவுரை :— ஒவ்வொரு வைதிகனும் லௌகிகனும் அவன வன் கிராமங்களுக்குப் போகும்பொழுது, பார்யார் வீடுகளில் பழைய ஏட்டுப் புஸ்தகங்க ளிருக்கின்றன வென்று விசாரித்து, இருக்கிற வைகளை அவர்கள் ரக்ஷியாத பக்ஷத்தில், உடனே வாங்கிக் கோவில் மடம் முதலான இடங்களில் எலி வாராம லிருக்கிற பெட்டியில் வைத்து, அதற்கு ஒரு வித்துவான் மூலமாக ஒரு லிஸ்டு எடுத்து, வெளிப்படுத்த வேண்டும். எங்கேயாவது ஓரிடத்தில் சில அபூர்வ மான கிரந்தங்கள் வரவே செய்யு மென்பது நிச்சயம். என் அனு பவத்தைச் சொல்கிறேன். ஈஸ்வரன் பலம் கொடுப்பார். இது நம் கிருத்தியம்; பலனாவது, அபூர்வ புஸ்தகங்கள். அதாவது, தத்வ சாஸ்திரங்களில் சில ஏடுகள்; விமான சம்பந்தமும், மின்சார சக்தி, பூமி விஷயமான சாஸ்திர சம்பந்தமு முள்ள ஏடுகள் தவறக் கூடாது.

ஆரியர்களே! சுபமஸ்து.





## சட்ட விஷயம்

(84-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

2. திருவாங்கூரில் விவாகச் சட்டம் :— இப்பொழுது புதி தாகச் சட்ட சபையில் நிறைவேறி, மகா ராணி ரீஜண்டால் அங்கீ கரிக்கப்பட்ட சட்டத்தின்படி :— (1) ஒரு நாயர் ஸ்திரீ, ஒரே காலத்தில் ஒரே புருஷனுக்குத்தான் மனைவியா யிருக்கலாம்; (2) ஒரு புருஷன் — எந்தக் குலத்தைச் சேர்ந்தவனா யிருந்தாலும் சரி—ஒரு காலத்தில், ஒரே ஸ்திரீயைத் தான், விவாகஞ் செய்து கொண் டிருக்கலாம். இது வரையில், பிராமணர் சிலர், அக்கினி சாக்ஷியாய்த் தாங்கள் கலியாணஞ் செய்துகொண்ட பிராமண குல மனைவிமார் தவிர, வேறு நாயர் ஸ்திரீகளையும் ''முண்டு கொடுத்து'' மணம் புரிந்து வந்தது, இனிமேல், பீனல் கோடின்படி குற்றமா கும் (3) பைத்தியம், தீரா வியாதி, நபும்சகம், குணபேதம், குரூர மாய் நடத்துதல், விபசாரம், மதம் மாறுதல், — இந்தக் காரணங் களை முன்னிட்டு, புருஷன் விரும்பினாலும், ஸ்திரீ விரும்பினாலும், நியாயாதிபதியால் விவாகம் ரத்து செய்யப்படலாம். இப்படிப் பட்ட கேஸுகள், அந்த அந்த ஊரிலுள்ள பிரமுகர்கள் சிலர் உத வியைக் கொண்டு, நியாயாதிபதிகளால், அந்தரங்கமாக, விசாரணை செய்து தீர்மானிக்கப்படும்.

3. டென்மார்க் தேசத்து விவாகச் சட்டம் :— ஐரோப்பிய நாடுகளில் மிகச் சிறியதும், சமுதாய நாகரீக முறைகளில் அதிக முன்னேற்றமுற்றுச் சிறந்ததுமாகும், டென்மார்க் நாடு. இந் தச்சிறு தேசமே, போலீசார் தவிர, வேறு சைநியங்களே யின்றி, மற்றெல்லா நாடுகளுக்கும் சிறந்த முன் மாதிரியாக நடக்க முயன்று வருகிறது. இக் காரணங்களால், இந்நாட்டில் நடைபெறும் விவா கச் சட்டம், பிற நாட்டாரால் கவனிக்கத் தக்கது. டென்மார்க்கிலே, தம்பதிகளின் சொத்து விஷயம், கணவன் மனைவி இருவருக்கும் பொது நியாயமாக, பின் வருமாறு தீர்மானிக்கப்பட் டிருக் கிறது: விவாக காலத்தில், புருஷனும் மனைவியும், அவரவர்க் குள்ள சொத்தைத் தெரியப்படுத்திக் கொள்வர். பிற்பாடு, அவர வர் சம்பாதிக்கும் பொருள், அவரவர் கைவசமிருக்கும். குடும்பச் சொத்தை, இருவரும் சேர்ந்து சம்மதித்தா லன்றி, அடைமானஞ் செய்யவோ, குத்தகைக்கு விடவோ, விற்கவோ கூடாது. அவர

வர் வருமானத்துக்கும் சொத்துக்கும் தக்கபடி, தம்பதிகள் இருவரும் குடும்பச் செலவுக்கு வேண்டிய பொருளை உதவவேண்டும். மனைவிக்கு வேறு சம்பாத்தியம், சொத்து, ஒன்றுமில்லாவிட்டால், வீட்டில் அவள் வேலைசெய்வதே, குடும்பச் செலவுக்கு அவள் பங்குப் பொருளாகக் கருதப்படும்.



## விகட விநோதம்

### 3. செட்டியும் மகனும்

ம. கா. லோ. பி. நாராயணன் செட்டியாரை, ஒரு நாள் நிலாச் சப்பாட்டுக்கு, தா. ரா. ள. நீலமேகம் செட்டியார் அழைத்தார். 'வண்டியில் போனால் வீண் செலவு; நடந்துபோனால், காசு லாபம், பசி யெடுத்து நன்றாய்ச் சாப்பிடலாம்' என்று நினைத்து, 9-மணி விருந்துக்காக வீட்டை விட்டு 7-மணிக்கே புறப்பட்டு, நாராயணன் செட்டியார் தன் சிநேகிதன் வீட்டுவாசலை அடைந்தார். அப்பொழுது, தன் வீட்டிலே தன் அறையி லுள்ள விளக்கை அணைக்க மறந்துபோய் வந்துவிட்டது, அவருக்கு ஞாபகத்துக்கு வந்தது. "நிலாச் சாப்பாடு முடிந்து வீடுதிரும்ப, மணி 12 ஆகுமே; அதுவரை விளக்கு வீணே எரிந்தால், குடி கெட்டுப் போகுமே" என்று பயந்து, ஓட்டமாய் வீடு திரும்பினார் செட்டியார். வீட்டில் தன் மகனைக் கண்டதும், "அப்பு! விளக்கு இன்னும் எரிகிறதா?" என்று கேட்டார்.

**மகன்**—இல்லை, ஐயா, நான் அவித்துவிட்டேன்; இப்படியும் உங்களுக்கு ஒரு மறதியா!

**செட்டியார்**—அதுதான் ஓடிவந்தேன், அப்பு. உடனே திரும்பி ஓடிப் போனால், $9\frac{1}{2}$ மணிக்குள்ளே, இரண்டாம் பந்திக்காவது போய்ச் சேரலாம்; நல்ல பசி யெடுக்கும்.

**மகன்**—அது சரிதான், ஐயா; இப்படிப் போகவர ஓடி, மிதியடி தேய்ந்துபோனால், அப்புறம் பிழைக்கிறது எப்படி?

**செட்டியார்**—இம்! எனக்குத் தெரியாதா, என்ன! இதோ பார், அப்பு, செருப்பைக் கட்கத்திலே வைத்துக்கொண்டல்லவோ வந்திருக்கிறேன்!

### 4. எவன் பெரிய புளுகன்?

**அம்பட்டன்**—வேட்டை நாய் துரத்திவர ஓடும் முயலின் கூடவே ஓடி, அதன் மீசையை நான் அழகாகச் சிரைத்து விடுவேன்.

**லாடங் கட்டுவோன்**—வண்டியிலே நாற்கால் பாய்ச்சலில் ஓடும் குதிரைகளின் கூடவே ஓடி, அவற்றுக்கு நான் லாடங் கட்டிவிடுவேன்.

**சிலம்பக்காரன்**—நான் வாளெடுத்துச் சிலம்பம் வீசினால், கொட்டுகிற மழையில் ஒரு துளியும் மேலே விழாமல், தடுத்துவிடுவேன்.



# மொழி பெயர்ப்புப் பகுதி

## பிறவிப் பேறு



ஒரு வருஷத்தின் உயிர்வளம், புதுமணம்,
ஒரு துளி தேனில் ஒருங்கு காணலாம்;
ஒரு சுரங்கத்தின் பெருமிதம், உயர்சீர்,
ஒரு மணி ஒளியினில் ஓர்ந்திடல் ஆகும்;
ஒரு முத்தகத்தில், உவரியில் குலவுறும்
பெருநிழல், ஒளியெலாம் பிறங்கக் காணலாம்;
உயிர்வளம், புதுமணம், பெருமிதம், உயர்சீர்,
அயர்நிழல், அவிர்ஒளி, இவைகள் அன்றியும்,
இவை யாவற்றினும் ஏற்ற மானதாம்,
அவிர்மணி எதனினும் மிக்கு ஒளிர் மணிடாம்
உண்மையும், முத்தின் தூய்மையில் உயரிய
திண்மைசால் திட நம்பிக்கையும், — செகத்தில்
பேரொளி உண்மையும், பிறங்கு தூய்மையில்
சீரிய திட நம்பிக்கையும், —
ஒரு பெண் முத்தம் உணர்த்தியது எனக்கே.

—**அமுதகவி.**

SUMMUM BONUM

**All the breath and the bloom of the year in the bag of one bee:**
**All the wonder and wealth of the mine in the heart of one gem:**
**In the core of one pearl all the shade and the shine of the sea:**
**Breath and bloom, shade and shine, wonder,**
**wealth, and—how far above them—**
**Truth, that's brighter than gem.**
**Trust, that's purer than pearl,—**
**Brightest truth, purest trust in the universe—all were for me.**
**In the kiss of one girl.**

—**Robert Browning.**

2, பின்வரும் ஆங்கிலச் சொற்களுக்குப் பிரதி பதங்கள் எழுதியனுப்ப வேண்டுகிறேன்:—

Citizen, Civil, Criminal, Curiosity, **Courtship, Convention**, Delicate, Doom, Dilettante, Dandy, **Drawing—master** Drill.





சிறுவர் பக்கம்

"பாலகிருஷ்ணன்"



### 3. புத்தி இல்லாத நாய்.

ஒரு நாய் ஒரு பாலத்தின் மேல் நடந்துபோய்க் கொண்டிருந்தது. அப்பொழுது, அதன் வாயில், ஒரு மாமிசத் துண்டத்தை, அது கௌவிக்கொண்டு இருந்தது. பாலத்தின் கீழே உள்ள ஜலத்தில் நாயின் நிழல் தெரிந்தது. அந்த பிம்பம் வேறு ஒரு நாய் என்று எண்ணி, நாய், அதைப் பார்த்துக் குலைத்தது. உடனே அதன் வாயிலிருந்த மாமிசம் கீழே ஜலத்துக்குள் விழுந்து விட்டது. நாய் அதிகம் வருத்தப்பட்டது.

### 4. ஒரு தந்திரமுள்ள நாய்.

பாரிஸ் பட்டணத்திலே, ஒருகனவான், தெருவழியே போய்க் கொண்டிருந்தான். அந்தத் தெருவில் சோடுகளைச் சுத்தம் செய்து, பளபளக்கும்படி துலக்கும் கடை ஒன்று உண்டு. அந்தக் கடை எதிரே போகும் பொழுது, அழுக்குப் பிடித்த ஒரு சிறு நாய் வந்து, கனவான் பூட்ஸில் உரசி, அழுக்காக்கிற்று. அவன் கொஞ்சம் பணங் கொடுத்து, அந்தக் கடையில் தன் சோடுகளைத் துலக்கிக்கொண்டு போனான். மறுநாளும் அப்படியே நடந்தது. அப்பால், கனவான் விசாரித்ததில், அப்படிச் செய்யும்படி, அந்தக் கடைக்காரன் தன் நாயைப் பழக்கி இருப்பது தெரிந்தது. அவ்வளவு புத்தியுள்ள நாயைக் கனவான் விலைக்கு வாங்கிக்கொண்டான். சில நாள் கழித்து, கனவான் தன் சொந்த ஊருக்குப் போனான்; தன் நாயையும் கூடக் கொண்டுபோனான். ஆனால், 2-3 நாள்களில், நாய் காணாமல் எங்கேயோ ஓடிப்போய்விட்டது. ஒரு வருஷம் ஆனபின்பு, கனவான் பாரிஸ் பட்டணத்துக்குத் திரும்பிவந்தான். அப்பொழுது, முன்போலவே, அந்த நாய் கடையிலிருந்து கொண்டு, வழியே போகிறவர்களின் சோடுகளில் போய் உரசி, அழுக்குப் பண்ணி வருவதை அவன் அறிந்தான்.



## இந்திய தேசியக் கல்வி

ஸ்ரீஜத் லாலா லஜபதிராய்

(32-ம் பக்கத்தின் தொடர்ச்சி)



### இரண்டாவது அதிகாரம்

தேசிய மேல்நோக்கங்கள் (National Ideals)



உலக நாகரிகத்தின் முன்னேற்றத்துக்கு, சிந்தனைகளாலும் செயல்களாலும் நம்மாலான உதவியை நாமும் செய்து, தற்கால நாகரிக உலகத்தின் ஒரு பகுதியாக நாமும் கூடிவாழ விரும்புகிறோமா? அல்லது, நாம் மாத்திரம் ஒரு தனிச் சமூகமாக ஒதுங்கிவாழ விரும்புகிறோமா? சுயாதீனம், பொருளாதார முயற்சிகளில் பிறர் கையை எதிர் பாராத நிறைவு, சமூக ஒற்றுமை; மத விஷயங்களில் சுதந்திரம், இவற்றை யெல்லாம் நாம் விரும்புகிறோம்; ஆயின், எதன் பொருட்டு? இவைகளே புருஷார்த்தங்களா? அல்லது, இவற்றினும் சிறந்த, மேலான, காரியசித்திக்கு, இவை கருவிகள் தானா? கருவிகள் தான் என்றால், காரியம் யாது?

நாம் முடிவில் வேண்டுவது மோக்ஷசாதனமே என்பர் சிலர். ஆனால், "மோக்ஷம்" என்றால் என்ன? பௌத்தர்கள் கூறும் நிருவாணமா? வேதாந்திகள் கூறும், ஜீவாத்மா பரமாத்வாவில் ஒடுங்குர், ஸாயுஜ்ய பதவியா? ஆரிய ஸமாஜத்தார் கூறும் தற்கால ஆனந்தமா? கிறிஸ்தவர் கூறும் முக்தியா? முகமதியர் கூறும் போகலோகமா? அல்லது, இவை யாவுமே பொய்யான மனோபாவங்களேயா? இந்த ஜன்மத்திலே, இந்தப் பூமியிலே, நாமும், நமது சந்ததியாரும், துன்பம், இல்லாமை, நோய்கள், அறியாமை, பலவகைப்படும் அடிமைத்தனம், இவற்றினின்றும் விடுதலை யடைதலே, உண்மையான மோக்ஷம். மறுமையிலே ஆனந்தத்தை நிச்சயமாய் அடைய விரும்புவோர், இப் பிறப்பிலே தரித்திரம், வியாதி, அஞ்ஞானம், பராதீனம், முதலிய கஷ்டங்களை அநுபவிப்பது நமது கடமை யென்று, சில மதங்கள் போதிக்கின்றன; ஏறக்குறைய இதுவே எல்லா மதங்களின் போக்காயிருக்கின்றது. ஆனால், இந் நாளிலே, மேற்கூறிய கஷ்டங்களைப் போக்

கும் பொருட்டு நாம் செய்துவரும் தீவிர முயற்சிகளையும் போராட்டத்தையும் பார்த்தால், அத்தியந்த மோக்ஷம் எப்படிப்பட்டதாயினும், இந்த உலகத்திலே நல் வழிகளில் பொருளையும் சரீர ஆரோக்கியத்தையும் முயன்று தேடி, சகல சௌபாக்கிய சம்பன்னராய் வாழும் சுக வாழ்க்கை, யாவரும் விரும்பத் தக்க காரியம் என்று, இந்தியர்கள் எல்லோரும் நம்புவது விளங்கும். ஆயினும், நமக்குள் வைராக்கியத்தையும் தியாகத்தையும் உயர்த்திப் புகழ்வோர், பலிருக்கின்றனர். கூரிய மதியும் விரிந்த நோக்கமும் திருந்திய கருத்தும் உள்ள நம்மவர்களில் பலர், சந்நியாசிகளையும் சாதுக்களையும் பக்கிரிகளையுமே மதச்சீலர்களாக இன்னும் மதித்து வணங்கி, மரியாதை செய்கின்றோம். நவநாகரிகமும் கல்விப் பயிற்சியும் அடைந்து, அவற்றின்படி நடப்பவர்களில் சிலருங்கூட, உலக இன்பம் எதையும் தாங்கள் துறக்காவிட்டாலும், சந்நியாசி யாசிரமமே சிறந்ததென, நமது வாலிபர்களுக்குப் போதிக்கின்றனர்.

'ஞானம்தான் மோக்ஷத்தைத் தரும்; அந்த ஞானம், கேவலம், அறிவு மட்டு மில்லை: அறிவை அநுபவசித்தியால் அடைந்ததாகும்' என்பது, உத்தம ஹிந்துமதத்தின் சித்தாந்தம். 'இந்த ஞானத்தைப் பெற விரும்புவோர், மிதமிஞ்சிவிடாமல், இந்திரிய போகங்களை அடக்கி, சம்பூரண வாழ்வை வாழவேண்டும்; பொதுஜன சமூகத்தில் தங்கள் கடமைகள் யாவற்றையும் செய்து நிறைவேற்ற வேண்டும்; சமூக வாழ்க்கையில் ஒத்துழைப்பினாலும் சம்சார பந்தங்கள் அநுபவ உணர்ச்சிகளினாலும், அறியக்கூடியவற்றை யெல்லாம், முதலில் அறிந்து கொள்ளவேண்டும்; அதன் பிறகு, வாழ்க்கையில் சில விஷயங்களைக் கைவிட்டு, வேறு சிலவற்றைக் கைக்கொள்ளலாம்' என்று, ஹிந்துமதம் வற்புறுத்துகின்றது. பண்டை நாளிலே, ஒருவன் துறவியாவது என்றால், தரித்திரத்தைச் செல்வத்திலும் மேலானதாகச் சிறப்பிப்பது என்பதன்று; தன் உயிர் வாழ்க்கையில் ஒரு காலத்திலே, சொத்துள்ளவர்க்குரிய கடமைகளினின்று நீங்குவது என்பதுதான், அதன் தாற்பரியம் உண்மையில், ஹிந்துக்களின் மிகப் பழைய கிரந்தங்களிலே, சந்நியாசிகளைப்பற்றிப் பேச வில்லை. நமது புராதன மகரிஷிகள், முனிவர்கள் எல்லோரும், சொத்துக்கள், குடும்பங்கள் இல்லாதவ ரில்லை. தத்துவத்தை ஆராய்தற்கும், யோக சித்திக்கும், வாழ்க்கை விஷயங்களைப்பற்றி ஆழ்ந்து சிந்திப்பதற்குமாகவே, அவர்கள், ஜன நெருக்கத்தைவிட்டு ஒதுங்கி வாழ்ந்து வந்தனர். அப்படிப்பட்ட ஏகாந்த வாழ்க்கை, ஜன சமூகத்தைத் தழுவிய காரியசித்தியின் கருவியே யன்றி, அதுவே ஒரு காரிய மன்று. முக்தியை விரும்பி அவர்கள் அப்படிச் செய்திலர்; ஜன சமூகத்துக்கு உதவி செய்வது தான், அவர்கள் உத்தேசம். நாளாவட்டத்தில், சிலாக்கியமான



இந்த மேல் நோக்கம் இழிவடைந்து, ஜன்ம சாபல்லியமே சந்நியாசம் தான்; துறவியே எவரினும் சிறந்தவன்; இந்த வாழ்க்கை மாளிகையின் உச்சிஸ்தூபி, யாவற்றையும்; கைவிட்டுத் துறவு பூணுவதே, என்றாகிவிட்டது. இதனால், இந்தக் காலத்திலே, நமது நாட்டாரில் கால்வாசிப் பேர், பொருள் விருத்திக்குரிய வேலைகள் முயற்சிகளை யெல்லாம் கைவிட்டு, வைராக்கியத்தையும் சந்நியாச தருமத்தையும் ஜனங்களுக்கு எடுத்தோதிக் கொண்டும்; ஒருவன் தானே துறவியாக முடியாவிட்டால், துறவிகளைப் பேணிப் போஷிப்பதே அடுத்த படியில் அவன் செய்தற்குரிய கடமை, அதனால் தான் அவன் நரகத்தைத் தப்பலாம் என்று, போதனை செய்துகொண்டும் திரிகின்றனர்.

உலக வாழ்க்கையை அற்பமா யெண்ணி, சந்நியாசத்தைப் பெருமதிக்கும் இந்த மனப்பாங்கு, ஹிந்து மதத்திற் போலவே, இஸ்லாமிலும் கிறிஸ்து மதத்திலும் வேரூன்றி யிருக்கின்றது. ஹிந்து மதச் சீர்திருத்தங்களாகும் ஆரிய ஸமாஜம், ப்ரும்ம ஸமாஜம், 'விவேகானந்தர் மிஷன்' முதலிய நவீன பிரசாரங்களிலும் இது தொனிக்கின்றது. நம்முடைய மதங்கள் இக்லோக வாழ்க்கையை அவமதிப்ப தில்லை யென்று, நாம் வாதம் செய்யலாம்; எனினும், நம்முடைய இலக்கியங்களிலும் இதிகாசங்களிலும் இந்தக் குணம் வியாபித்திருப்பதையும், அவற்றை வாசிப்பவர் இந்தச் சக்திக்குள்ளாகாமல் தப்ப முடியா தென்பதையும், நாம் மறுக்க முடியாது.

இக் காலத்திலே, இகவாழ்க்கையைப் பெருமதிக்கும் மனப்பான்மை நமக்குள் தோன்றியிருப்பது, மேல் நாட்டுக் கல்விப் பயிற்சியின் பலனேயாகும். அதை நாஸ்திகக் கல்வி யென்பர். சில சமயங்களில், அது நாஸ்திகக் கல்வியாயிருப்பதை நினைந்து, நான் மகிழ்கிறேன்; ஏனெனில், இந்தக் கல்வியை நாம் பெற்றிராவிடின், நாம் உறக்கத்தைவிட்டு இதுவரை விழித்தெழுந்திருக்க மாட்டோம். என் அபிப்பிராயத்தில், "வாழ்வாவது மாயம்" என்னும் எண்ணம் வேரோடு தொலைவதுதான், இந்தியாவின் முதல் அவசியம். நம் தேசத்தின் பலவீனத்துக் கெல்லாம் அதுதான் அடிப்படைக் காரணம். கிறிஸ்து மதத்திலும் இந்த மனப்பான்மை யுண்டு; ஆனால், கிறைஸ்தவச் சாதியார்களும் நாட்டார்களும் தமது மதத்தின்படி நடக்க வில்லை ஐரோப்பிய நாடுகள் முன்னேற்ற மடைந்து தழைப்பது, அந் நாட்டினர் கிறிஸ்தவக் கொள்கைகளின்படி ஒழுகாததனால்தான். நாம் செய்யவேண்டிய அதி முக்கியமான வேலை, இந்த விஷயத்தில் நமது ஜனங்களின் மனப்பாங்கை (வைராக்கிய புத்தியை)த் திருப்பி, உலக வாழ்க்கையிலே ஆசையும் ஊக்கமும் உள்ளவர்களாக அவர்களை மாற்றுவதேயாம்.

உலக வாழ்க்கை விலக்கமுடியாத துன்பம், தீராப்பொறி என்பது, நமது ஜனங்களின் மனத்தில் ஆழ்ந்து வேரூன்றி யிருக்கின்றது. சம்சாரம் துக்கசாகரம்; அதைவிட்டு நீங்கிக் கரையேறி, இனிப் பிறவி யில்லை என்றுவதுதான் மோக்ஷம் என்பது, இந்தியர்க்குள் பொதுவான நம்பிக்கை. உலக வாழ்க்கை ஒரு மாயை யில்லை, உண்மையானது, சிலாக்கியமானது, யாவரும் உகந்து பேணிப் போற்றி அநுபவித்தற்குரியது என்பதை, நமது ஜனங்கள் அறிய வில்லை. ஆயினும், நம்மவர்கள் உயிரை ஒரு பொருட்டாக மதிப்பதில்லை யென்றும் சொல்ல வொண்ணுது. மனிதர் உயிரைவிட அற்ப ஜந்துக்களின் உயிரையும் பலர் பெருமதிக்கின்றனர்; எப்படியாவது உயிரோடிருந்தால் போதும், கவுரவமாய் வாழவேண்டும் என்பதில்லாதபடியும், மிகப்பலர் சீவிக்கின்றனர்.

“ அரிது, அரிது, மானுடராதல் அரிது ” என்று கூறிய ஆதி ஹிந்துக்கள், எவ்வளவு காலத்துக்குப்பின், எவ்வளவு சிரமத்தின் மேல், மனுஷ ஜன்மம் பரிணமித்திருக்கின்றது என்பதைத் தெளிவாய் உணர்ந்திருந்தனர் போலும். மனித ஜன்மம் எவ்வளவு சிறந்தது என்பதை ஒரு நாட்டுப் புறத்து மூடனும் நன்கறிவான். அப்படிப்பட்ட ஜன்மத்தின், மனிதர் வாழ்க்கையின், லக்ஷியம் என்ன? என்பதைப் பற்றித்தான், சரியான ஞான மில்லை. ‘ஆசையை அடக்கவேண்டும்; இந்திரியங்களை ஒடுக்கவேண்டும்; எப்படியாவது இனிப் பிறவாமல் தப்பித்துக் கொள்ளவேண்டும்’ என்று சருவதா ஓதுவதைக் கேட்டுக் கேட்டு, வாழ்க்கையைச் சிறுமதித்து, அவன் அதன் பயனை இழக்கிறுன்.

இந்த மூட நம்பிக்கையைத் தொலைப்பதே தேசியக்கல்வியின் முதல் குறியா யிருக்கவேண்டும். இந்தத் தவறுன அபிப்பிராயமே மலிந்து விபரிக்கும். இப்பொழுதுள்ள நமது கிரந்தங்களைப் பரப்பி வாசிக்கச் செய்வதால், இந்த லக்ஷியம் கைகூடாது. ஸம்ஸ்கிருத பாஷையிலும், இலக்கியத்திலும் எனக்கு அதிகப் பிரியமுண்டு; ஆனுல், பொதுவான கல்விப் பயிற்சியை அதன் மூலமாய்க் கொடுத்து, அதைக்கொண்டு நாட்டை முன்னேற்ற மடையக் செய்வ தென்பது; என் அபிப்பிராயத்தில், சாத்திய மில்லை, உசிதமு மில்லை.

நமது புராதன சரித்திர ஆராய்ச்சிக்கு அது முக்கியமானதே. வேண்டிய பதங்களை உதவி நமது தாய் மொழிகளை வளர்த்துப் பெருகச்செய்ய, அது இன்றியமையாததே; எனவே, பண்டிதர்களுக்கும் ஆராய்ச்சிக்காரருக்கும் ஸம்ஸ்கிருதம் அவசியமே; வேறு சாமானிய ஜனங்களுக்கு அது முக்கியமாகத் தோன்ற வில்லை. ஐரோப்பாவிலே க்ரீக் லத்தீன் பாஷைகளைப் போன்றது, இந்தியாவில் ஸம்ஸ்கிருதம். இப்பொழுது ஐரோப்பாவில் பண்டிதர்களைத்



தவிரப் பிறர் அந்தப் பாஷைகளைக் கற்பது குன்றிவருகிறது. அவ்வாறே, தமது வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றிபெற்று மேன்மையுற விரும்பும் இந்தியர்களும், ஸம்ஸ்கிருதப் படிப்பைக் கைவிட வேண்டியதுதான்.

பண்டைக் காலத்தில் நம் முன்னோரைப் போல நாம் இப்பொழுது வாழ முயலுவது, பயனற்ற செயல்மட்டுமோ, மூடத்தனமு மாகும்; நமது கவலைக் குரியது வருங்காலமேயாம். தனது பெருமைக்குத் தக்கபடி, இந்தியா, வருங் காலத்தில் குறையேது மின்றிச் செழித்து வலுத்து வாழவேண்டு மானுல், உலகத்திலே மற்ற நாட்டார்களைப்போல, தமது புத்தித் திறமைகளையும் ஐசுவரிய மூலங்களையும் இயன்றமட்டும் பயன்படுத்திவாழ, இந்தியர்களும் முயலவேண்டும்.

ஆதி ஆரியர்களிடத்தில் நான் அளவிறந்த மதிப்பும் மரியாதையும் உடையவன். அறிவைப் பெருக்குவதிலும், விவேகத்திலும், ஆத்ம சக்தியிலும், ஒழுக்க சீலத்திலும், இலக்கியப் பயிற்சியிலும் அவர்கள் அடைந்துள்ள பெருஞ் சிறப்பை எண்ணியெண்ணி, என் மனம் பூரிக்கின்றது. எனினும், அவர்களுக்குப் பிற்காலம் உலகத்தில் அறிவு எவ்வளவோ வளர்ந்தோங்கி யிருக்கிறது என்பதை மறப்பது, கண்மூடித் தனமாகும். அறிவு பெருகப்பெருக புத்தியும் விருத்தியடைவது உண்மையானுல், மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்தோரைவிட இப்பொழுது உலகத்தில் உள்ளவர்கள் புத்திசாலிகள் என்றுதான், நாம் கொள்ள வேண்டும். இவ் வண்ணம் பெருகி வளர்ந்த அறிவும், அதன் பலனை விவேகமும், அந்நிய பாஷைகளி லிருக்கின்றன. ஆண்டு தோறும், மாதந்தோறும், நாளுக்கு நாள், அறிவு இன்னும் பெருகி வருகின்றது. இதனுல், விஞ்ஞான சாஸ்திர சம்மந்தமாகப் போன வருஷம் எழுதிய நூல், இந்த ஆண்டிலே, இடையில் அறிந்த விஷயங்களையும் சேர்த்துத் திருத்திப் பதிப்பித்தா லொழிய, பழையதாகிப் பயன் குன்றிவிடுகின்றது. உலகத்தில் முன்னேற்ற முற வேண்டுவோர் எவருமே, இந்தச் சாஸ்திரப் பயிற்சியைப் புறக்கணிக்க முடியாது; அந்நிய மொழிகளின் மூலமாகத்தான், இன்னும் சிலவாண்டுகளுக்கேனும், இந்தப் பயிற்சியும் படிப்பும் சாத்தியமாகும்.

தவிர, நீராவி மின்சார சக்திகளினுல் தற்காலத்தில் இயங்கும் இயந்திரங்கள், தூரம் என்பதைத் தொலைத்து, பூமியிலே நெடுந் தொலையான பிரதேசங்களில் சிதறி வாழும் ஜனங்களை அண்டையூர் வாசிகள் போலாக்கி விட்டன. இதனுல், தாம் மட்டும் ஒதுங்கித் தனித்து வாழவேண்டுமென எந்தத் தேசத்தார் விரும்பினும், அது முடியாத காரியம். ஒரு நாட்டார் மற்ற நாட்டார்

களோடு வாணிகப் பரிவர்த்தனைகள் செய்து உறவாடுவது, அவ
ரவர் இஷ்டத்தைப் பொறுத்த தன்று; கட்டாயமாகி விட்டது.
இந்தியாவின் வர்த்தகம் அந்நியராலன்றி இந்தியர்களால் நடைபெற
வேண்டுமாயின், இந்தியர்களே அந்த லாபத்தை அடையவேண்டு
மாயின், நமது வியாபாரிகள், தற்காலத்து (அந்நிய) பாஷைகளில்
எத்தனை பாஷைகளைக் கற்கிறார்களோ அவ்வளவுக்கு நலமாகும்.
இந்தியர்களில் பெரும்பான்மையோர் பயிர்த்தொழிலிலோ, பண்
டங்களை யுண்டுபண்ணும் தொழிற்சாலைகளிலோ, வியாபாரத்
திலோதான் பிரவர்த்தி செய்யவேண்டும். இந்தத் துறைகளிலெல்
லாம் தற்கால பாஷைகளைத் தெரிந்திருப்பது அவசியம். இப்படிப்
பட்ட நிலைமையில், வாழ்க்கைப் போருக்கு நமது வாலிபர்களைத்
தயார் செய்துவிடும் பள்ளிக்கூடக்களிலே, புராதனமானதும்
கஷ்டமானதும் சிக்கலானதுமான ஸம்ஸ்கிருத பாஷையைப் பயிலு
வதில் அவர்கள் காலத்தையும் புத்தியையும் செலவிடச் செய்வது,
கண்மூடித்தனமான துர்விநியோகமாவது மன்றி, நமது தேசிய
சாமர்த்தியத்தைக் குறைத்து விடுமென்பதில் சந்தேக மில்லை.
ஆதலால், மற்ற விசேஷ போகங்களைப்போல, ஸம்ஸ்கிருதப்
பயிற்சியும், நமக்குள் பண்டிதர் சிலருக்கு மாத்திரமே சாத்தியம்,
எல்லோரும் அநுபவிக்கக் கூடியதன்று என்பதை நாம் தெளிவாய்
உணர்ந்து, இன்னும் காலத்தை வீண்போக்காமல் தீர்மானித்துக்
கொண்டு, அப்படியே ஒழுக வேண்டும். ஆராய்ச்சி பயிற்சிகளின்
பொருட்டும், தாய் மொழிகளை விருத்தி செய்வதற்குத் துணையாக
வும், நமக்குள் மிகச் சிலரே ஸம்ஸ்கிருதம் பயில, மற்றெல்லோரும்,
இந்தியாவிலும் பிற நாகரிக நாடுகளிலும் வழங்கும் தற்காலத்துப்
பாஷைகள் பலவற்றைப் பயிலுவது அவசியம்.

நமது பழைய இலக்கியங்களை விட்டு, பரம்பரையாய் வரும்
போதனு முறையைப்பற்றி ஆலோசிக்குமிடத்து, அந்த (குருகுல
வாச) முறையை மீண்டும் உயிர்ப்பித்துக் கையாள முயல்வது
மூடத்தன மென்பதே என் துணிபு. அந்த முறை இக் காலத்துக்
குப் பொருந்தாதது, பழையது; அதை இப்பொழுது அநுஷ்டிப்
பது, பிற்போக்கன்றி முன்னேற்றமாகாது. இப்பொழுது நடை
பெறும் கல்வி முறை, சில அம்சங்களில் மிகக் கெட்டதே; பழைய
முறையை இதைவிட மேலென்று சொல்லலாம். ஆயினும், சில
அம்சங்களில் மட்டும்தான் இது பொருந்தும். பழைய குரு—சிஷ்ய
முறையில் நற்குணமுமுண்டு; துர்க்குணமுமுண்டு; சிஷ்யனுடைய
குணு குணங்களை நேரில் பழகி உணர்ந்து, அவனவனுக்கு வேண்
டியவாறு, குருவானவர் சிரத்தை யெடுத்து, சிஷ்யர்களைப் பயிற்றிய
மட்டில், அது சிறந்ததே; ஆனால், சிஷ்யனது புத்தியையும் மனத்
தையும் குருவுக்கு அடிமைப்படுத்திவிடும் தீக்குணம் அதிலிருந்



தது. வித்தியார்த்தி, விஷயங்களைத் தானகவே ஆலோசித்து,
தன் பொறுப்பையும் ஜன சமூகக் கடமைகளையும் உணர்ந்து,
தானகவே தீர்மானத்துக்கு வரும்படி செய்வதே, கல்விப்பயிற்சி
யின் குறிக்கோளா யிருக்கவேண்டும். பழைய குருகுலவாச
முறை இதைச் செய்யவில்லை. அதனல் இதைச்செய்யவு முடியாது.
வித்தியாரம்பத்தில், சிஷ்யன், குரு விஷயத்தில் செய்துகொண்ட
சபதத்தையும், குரு கூறிய ஆசி மொழிகளையும் ஆராய்ந்து பார்த்
தால், சிஷ்யனையும் (இயற்கையில் அவனுடைய குணுகுணங்களும்
மனேபாவங்களும் எப்படி யிருப்பினும்) குருவைப்போல் ஆக்கி
விடுவதே இலக்ஷிய மென்பது விளங்கும். ஒவ்வொரு குருவும், ஒவ்
வொரு தந்தையும், தன் சிஷ்யர்களும் தன் மக்களும், தன்னைவிடச்
சிறந்தவர்களாவதையே *கருதி உழைக்கவேண்டுமேயன்றி, தமக்கு
நகல்களாக்க விரும்புவது தகாது. புராதன முறையிலே, சிஷ்யர்
கள், யந்திரங்களைப்போல, நயப்பில்லாத விதிவிலக்குக்களுக்குள்
ளாக்கி, வெகு கண்டிப்பாய் நடத்தப்பட்டார்கள். இலக்கண விதி
களையும் சூத்திரங்களையும் மனப்பாடம் செய்வதில், அபரிமிதமான
காலம் செலவழிக்கப்பட்டது. மத விஷயத்திலே, இடுங்கிச் சுருங்
கிய கோட்பாடுகளும், கண்டிப்பான விதிகளும் கிரியாநுஷ்டானங்
களுமே போதிக்கப்பட்டன. இந்தியாவில் மாத்திரமன்று, அராபி
கள், கிரேக்கர், உரோமர்களுக்குள்ளும் இப்படிப்பட்ட கல்வி
போதனு முறைகளே நடைபெற்று வந்தன. இந்த நிலைமையிலுமே
சிறந்த மேதாவிகள் சிலர் தலையெடுத்து விளங்கினமை, ஐங்குரவர்,
அரசாங்கம், இவற்றின் அதிகாரங்களால் அமுக்குண்டு பந்தப்
பட்ட போதிலும், அவற்றையெல்லாம் மீறி மேற்கிளம்பி, மனித
னது ஆத்ம சக்தி பிரகாசிக்க வல்லது என்பதைத் துலக்குகின்றது.

இத் தன்மையான குருகுல வாசம், பிராமணப் பிள்ளைகளுக்
காகவே முக்கியமாய் ஏற்பட்டது. நாடு முழுதும், எல்லோர்க்கும்
பொதுவாய், நடை பெற வில்லை என்று நினைக்க இடமுண்டு. அது
எங்ஙன மிருப்பினும், இக் காலத்தில், இந்தியாவுக்கெல்லாம் பொது
வான கல்விபோதனு முறையாக, அதை மீண்டும் அநுஷ்டிக்க
முடியா தென்பதிற் சந்தேக மில்லை. மற்ற நாடுகளுக்குச் சமமாக
இந்தியாவும் முன்னேற்ற மடைவதற்கு, இந்தியப் பிள்ளைகள்
பெண்களுக்கு இருக்கவேண்டிய குண விசேஷங்களை அவர்களிடம்
உண்டாக்கும் முயற்சிக்கு, அது தடையாகும் என்பது உறுதி.
உலக வாழ்க்கை பல சோதனைகள் நிறைந்தது; மிதமாக, தீங்கு
நேராமல், அநுபவித்தற் குரியது. நம்முடைய சிறுவர் சிறுமிகள்,
அதன் மத்தியில் பயின்று, ஜன சமூகத்தின் அங்கத்தினராய்

* தம்மில் தம்மக்கள் அறிவுடைமை, மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது''—திருக்குறள்,

வாழத் தெரிந்து கொள்ளவேண்டுமே யன்றி, ஒதுங்கிய ஆசிரமங்களில் கல்வி பயிலுவது தகாது. பிள்ளைகளும் பெண்களும், இளமைப் பருவத்திலேயே, ஜனசமூகத்திற்குத் தாங்கள் செலுத்தற்குரிய கடமைகளை நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். அந்தப் பருவத்திலே, நகரங்களையும் ஊர்களையும் விட்டு, ஏகாந்தமான இடங்களிலுள்ள கலாசாலைகளில் அவர்களுக்குக் கல்வி புகட்டுதல், பெருந்தவறாகும் ; ஏற்ற சமயத்தை இழந்து விடுவதாகும்; அவர்கள் கல்விப் பயிற்சியில் ஒரு முக்கிய அம்சத்தை மறந்து விடுவதாகும். வாழ்க்கைப் போருக்கு ஆண்களையும் பெண்களையும் தயார் செய்வதே கல்விப் பயிற்சியின் குறி; அவர்களைத் துறவிகளும் முனிகளும் ஆக்குவ தன்று. இன்றை மாணவர்களே நாளை நாகரிகராவர் ; அவர்களில் சிலரே நம்முடைய அமைச்சரும், தளபதிகளும், வர்த்தகத் தலைவரும், யந்திர யுக்தி சாலிகளும், ஆசாரியர்களும், தத்துவ ஞானிகளும், ஜன நாயகர்களும் ஆகவேண்டும்; ஆதலால், உலக வாழ்க்கையில் ஆழ்ந்தகன்ற அநுபவ ஞானம், அவர்களுக்கு இன்றியமையாததாம்.

தனிமையாகப் பயின்று வந்த பிள்ளைகளும், கோஷா முறையில் பழக்கப்பட்ட பெண்களும், ஆண்மையும் பெண்மையும் சிறந்தவராகார் ; சமயோசிதப்படி ஒழுக அறியார் ; ஆசாபாச மயக்கங்களால் எளிதில் ஏமாந்து கெட்டு விடுவர் ; தக்கபடி தம்மைக் காத்துக்கொள்ள அறியார். மற்றவர்கள் கெடுவ தில்லை யென்று, நான் சொல்ல வில்லை ; உலகாநுபவ மில்லாதவரைப்போல, அவ்வளவு தத்தளிக்கமாட்டார், கெட்டுவிட மாட்டா ரென்றே கூறுகிறேன் ; சமயத்துக்குத் தக்கபடி நடக்கும் நிதானபுத்தி, அவர்களுக்குக் குறைவாயிருக்கும்.

நமது பிள்ளைகளையும் பெண்களையும் தனிமையான குருகுலங்களிலும் ஆசிரமங்களிலும் கல்வி பயிற்றுவது தவறு, நல்ல தன்று என்று, என் முழுமனத்தோடும் முழுச் சக்தியோடும் நம்மவர்களுக்கு நான் வற்புறுத்திக் கூறுகிறேன். பிள்ளைகளையும் பெண்களையும் நமது சகபாடிகளாக, தோழர்கள்போல, முழு நம்பிக்கையோடும் எவ்விதக் கள்ளம் கரவின்றியும் நடத்தவேண்டுமே யன்றி, நமக்குக் கீழானவர், தாழ்ந்தவர், நம் கையை எதிர் பார்ப்பவராக, நடத்தக் கூடாது. பிள்ளைகளையும் பெண்களையும் பிரத்தியேகமாக வையாமல், சேர்ந்து பழகும்படியே கல்வி பயிற்றவேண்டும். அவர்களை ஒன்று சேர்ப்பதைவிடப் பிரித்து வைப்பதனால்தான், அதிகத் தீங்கு விளைகிற தென்பது, என் அபிப்பிராயம். நான் கூறுவது பலர்க்குப் பிடிக்காத, சூக்ஷ்மமான விஷயம் என்பதை நான் அறிவேன். பல நூற்றாண்டுகளாகத் திரண்டு வந்திருக்கும் தூர் அபிமானமும் மனோபாவமும், கட்டுப்பட்ட வாழ்க்கையும், இதற்கு



விரோதமாயிருக்கின்றன ; ஆயினும், படிப்படியாய் அது வரும் ; வரத்தான் வேண்டும், வரவே செய்யும்.

மற்ற ஜனங்களின் அநுபவ ஞானத்தால் நாம் பயன் அடையாமற் போவது, வீண் உழைப்புக் கிடமாகும், நல்லொழுக்கம். மானம், மரியாதைகளைப் பற்றிய நம் அபிப்பிராயங்கள் எவ்வளவோ மாற வேண்டும். கள்ளம் கரவின்றி, யதேச்சையாய், பரஸ்பர நம்பிக்கையோடு, நமது பிள்ளைகளும் பெண்களும் ஒருவரோடொருவர் பழகவேண்டும். சமுசய குணத்தையும் அவ நம்பிக்கையையும் நாம் முற்றிலும் துறந்துவிட வேண்டும். பாசாங்கு, இச்சகம், இவை வியாதிகளையே விளைக்கின்றன. வருங்காலத்து இந்திய ஆசிரியர்களும் குருக்களும் தமது அதிகார தோரணையை விட்டுவிடவேண்டும். தங்கள் இஷ்டப்படி, வேண்டிய அச்சுப் படி வனையத்தக்க, களிமண் அல்ல பிள்ளைகளும் பெண்களும் என்பதை, அவர்கள் உணரவேண்டும்; அப்படி யாரேனும் எண்ணினால் அது மௌட்டியமே. பிள்ளைகளும் நம்மைப் போன்ற ஆசாபாசங்களும் கருத்துக்களும் உத்தேசங்களு முள்ள ஜீவப் பிராணிகளே. அவர்களுடைய மனோ விருத்திகளையும் ஆசைகளையும் நெறிப்படுத்த வேண்டும் ; ஆனால், கேவலம், அதிகாரத்தினால் மாத்திரம் முடியாது ; அதிகாரத்தைக் கொண்டே அதை முயன்றால், ஆண்மையும் பெண்மையும் சிதைவுறவே செய்யும். "இது தான் நல்லது, இதுதான் சிறந்தது, இப்படிச் செய்" என்று, அவர்களுடைய புத்திக்குத் தெளிவாய் விளங்கி அவர்கள் நம்பாத விஷயங்களில், நாம் கட்டளை யிடுகிறோம். இதனால், அதிகாரத்துக்கு அடங்கி ஒழுகும் அடிமைக்குணம் ஏற்பட்டு வழக்கமாகிவிடுகின்றது. குழந்தைகளின் கல்வி போதனாமுறையில் அதிகாரமே யில்லாமல் முடியாது. அவர்களின் க்ஷேமத்துக்காகவே சில வேளைகளில் அதிகாரம் அவசியமாகும் என்பது மெய்தான். ஆனால், வேறு வழியில்லாமற் போய், நம்மாலியன்றமட்டும் முயன்று பார்த்தும், குழந்தைகளாகவே விவரந்தெரிந்து, அதன்படி நடக்கமுடியாமற் போனால்தான், அதிகார முறையைக் கையாளவேண்டும்.

பெற்றோரும் ஆசிரியர்களும் குழந்தைகளிடம் கௌரவமாய், பக்தியோடு, நடக்கத் தெரிந்து கொள்ளவேண்டும். ஜப்பானியன் எவனும் தன் குழந்தையை அடிப்ப தில்லை ; அப்படியிருந்தும் ஜப்பானியக் குழந்தைகள் புத்தி கெட்டு முரண்டுவ தில்லை. ஜப்பானியர், தங்களுக்குச் சமானராகவே குழந்தைகளையும் மதித்து நடத்துகின்றனர் ; அடிப்பதே யில்லை ; கடுஞ்சொல்லும் கோபிப்பதும் துர்லபம் ; ஆயினும் ஜப்பானியர் தன்னடக்கமும் கடமைப் பற்றும் தேசபக்தியு முள்ள சிலர்களாய் விளங்குகின்றனர். புதிய இந்தியர் முன்னேற்ற முறுவதற்கு, தன்னம்பிக்கையும் மேற்

வாழத் தெரிந்து கொள்ளவேண்டுமே யன்றி, ஒதுங்கிய ஆசிரமங்களில் கல்வி பயிலுவது தகாது. பிள்ளைகளும் பெண்களும், இளமைப் பருவத்திலேயே, ஜனசமூகத்திற்குத் தாங்கள் செலுத்தற்குரிய கடமைகளை நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். அந்தப் பருவத்திலே, நகரங்களையும் ஊர்களையும் விட்டு, ஏகாந்தமான இடங்களிலுள்ள கலாசாலைகளில் அவர்களுக்குக் கல்வி புகட்டுதல், பெருந்தவறாகும்; ஏற்ற சமயத்தை இழந்து விடுவதாகும்; அவர்கள் கல்விப் பயிற்சியில் ஒரு முக்கிய அம்சத்தை மறந்து விடுவதாகும். வாழ்க்கைப் போருக்கு ஆண்களையும் பெண்களையும் தயார் செய்வதே கல்விப் பயிற்சியின் குறி; அவர்களைத் துறவிகளும் முனிகளும் ஆக்குவ தன்று. இன்றை மாணவர்களே நாளை நாகரிகராவர்; அவர்களில் சிலரே நம்முடைய அமைச்சரும், தளபதிகளும், வர்த்தகத் தலைவரும், யந்திர யுக்தி சாலிகளும், ஆசாரியர்களும், தத்துவ ஞானிகளும், ஜன நாயகர்களும் ஆகவேண்டும்; ஆதலால், உலக வாழ்க்கையில் ஆழ்ந்தகன்ற அநுபவ ஞானம், அவர்களுக்கு இன்றியமையாததாம்.

தனிமையாகப் பயின்று வந்த பிள்ளைகளும், கோஷா முறையில் பழக்கப்பட்ட பெண்களும், ஆண்மையும் பெண்மையும் சிறந்தவராகார்; சமயோசிதப்படி ஒழுக அறியார்; ஆசாபாச மயக்கங்களால் எளிதில் ஏமாந்து கெட்டு விடுவர்; தக்கபடி தம்மைக் காத்துக்கொள்ள அறியார். மற்றவர்கள் கெடுவ தில்லை யென்று, நான் சொல்ல வில்லை; உலகாநுபவ மில்லாதவரைப்போல, அவ்வளவு தத்தளிக்கமாட்டார், கெட்டுவிட மாட்டா ரென்றே கூறுகிறேன்; சமயத்துக்குத் தக்கபடி நடக்கும் நிதானபுத்தி, அவர்களுக்குக் குறைவாயிருக்கும்.

நமது பிள்ளைகளையும் பெண்களையும் தனிமையான குருகுலங்களிலும் ஆசிரமங்களிலும் கல்வி பயிற்றுவது தவறு, நல்ல தன்று என்று, என் முழுமனத்தோடும் முழுச் சக்தியோடும் நம்மவர்களுக்கு நான் வற்புறுத்திக் கூறுகிறேன். பிள்ளைகளையும் பெண்களையும் நமது சகபாடிகளாக, தோழர்கள்போல, முழு நம்பிக்கையோடும் எவ்விதக் கள்ளம் கரவின்றியும் நடத்தவேண்டுமே யன்றி, நமக்குக் கீழானவர், தாழ்ந்தவர், நம் கையை எதிர் பார்ப்பவராக, நடத்தக் கூடாது. பிள்ளைகளையும் பெண்களையும் பிரத்தியேகமாக வையாமல், சேர்ந்து பழகும்படியே கல்வி பயிற்றவேண்டும். அவர்களை ஒன்று சேர்ப்பதைவிடப் பிரித்து வைப்பதனுல்தான், அதிகத் தீங்கு விளைகிற தென்பது, என் அபிப்பிராயம். நான் கூறுவது பலர்க்குப் பிடிக்காத, கூச்சமான விஷயம் என்பதை நான் அறிவேன். பல நூற்றுண்டுகளாகத் திரண்டு வந்திருக்கும் தூர் அபிமானமும் மனுேபாவமும், கட்டுப்பட்ட வாழ்க்கையும், இதற்கு



விரோதமாயிருக்கின்றன; ஆயினும், படிப்படியாய் அது வரும்; வரத்தான் வேண்டும், வரவே செய்யும்.

மற்ற ஜனங்களின் அநுபவ ஞானத்தால் நாம் பயன் அடையாமற் போவது, வீண் உழைப்புக் கிடமாகும், நல்லொழுக்கம், மானம், மரியாதைகளைப் பற்றிய நம் அபிப்பிராயங்கள் எவ்வளவோ மாற வேண்டும். கள்ளம் கரவின்றி, யதேச்சையாய், பரஸ்பர நம்பிக்கையோடு, நமது பிள்ளைகளும் பெண்களும் ஒருவரோடொருவர் பழகவேண்டும். சமுசய குணத்தையும் அவநம்பிக்கையையும் நாம் முற்றிலும் துறந்துவிட வேண்டும். பாசாங்கு, இச்சகம், இவை வியாதிகளையே விளைக்கின்றன. வருங்காலத்து இந்திய ஆசிரியர்களும் குருக்களும் தமது அதிகார தோரணையை விட்டுவிடவேண்டும். தங்கள் இஷ்டப்படி, வேண்டிய அச்சுப்படி வனையத்தக்க, களிமண் அல்ல பிள்ளைகளும் பெண்களும் என்பதை, அவர்கள் உணரவேண்டும்; அப்படி யாரேனும் எண்ணிஞல் அது மௌட்டியமே. பிள்ளைகளும் நம்மைப் போன்ற ஆசாபாசங்களும் கருத்துக்களும் உத்தேசங்களு முள்ள ஜீவப் பிராணிகளே. அவர்களுடைய மனே விருத்திகளையும் ஆசைகளையும் நெறிப்படுத்த வேண்டும்; ஆனல், கேவலம், அதிகாரத்தினல் மாத்திரம் முடியாது; அதிகாரத்தைக் கொண்டே அதை முயன்றால், ஆண்மையும் பெண்மையும் சிதைவுறவே செய்யும். "இது தான் நல்லது, இதுதான் சிறந்தது, இப்படிச் செய்" என்று, அவர்களுடைய புத்திக்குத் தெளிவாய் விளங்கி அவர்கள் நம்பாத விஷயங்களில், நாம் கட்டளை யிடுகிருேம். இதனல், அதிகாரத்துக்கு அடங்கி ஒழுகும் அடிமைக்குணம் ஏற்பட்டு வழக்கமாகிவிடுகின்றது. குழந்தைகளின் கல்வி போதனுமுறையில் அதிகாரமேயில்லாமல் முடியாது. அவர்களின் க்ஷேமத்துக்காகவே சில வேளைகளில் அதிகாரம் அவசியமாகும் என்பது மெய்தான். ஆனல், வேறு வழியில்லாமற் போய், நம்மாலியன்றமட்டும் முயன்று பார்த்தும், குழந்தைகளாகவே விவரந்தெரிந்து, அதன்படி நடக்கமுடியாமற் போனுல்தான், அதிகார முறையைக் கையாளவேண்டும்.

பெற்றேரும் ஆசிரியர்களும் குழந்தைகளிடம் கௌரவமாய், பக்தியோடு, நடக்கத் தெரிந்து கொள்ளவேண்டும். ஜப்பானியன் எவனும் தன் குழந்தையை அடிப்ப தில்லை; அப்படியிருந்தும் ஜப்பானியக் குழந்தைகள் புத்தி கெட்டு முரண்டுவ தில்லை. ஜப்பானியர், தங்களுக்குச் சமானராகவே குழந்தைகளையும் மதித்து நடத்துகின்றனர்; அடிப்பதே யில்லை; கடுஞ்சொல்லும் கோபிப்பதும் தூர்லபம்; ஆயினும் ஜப்பானியர் தன்னடக்கமும் கடமைப் பற்றும் தேசபக்தியு முள்ள சீலர்களாய் விளங்குகின்றனர். புதிய இந்தியர் முன்னேற்ற முறுவதற்கு, தன்னம்பிக்கையும் மேற்

போக்குமுள்ள புருஷர்களும் ஸ்திரீகளும் வேண்டும்; பெற்றோரும் ஆசிரியரும் அதிகாரத்தையே கைப்பற்றியாளும் போதனு முறையன்று, அப்படிப்பட்டவர்களைப் பயிற்றிவிட ஏற்றது. ஆகையால், பண்டை நாளிலும் மத்திய காலத்திலும் நடைபெற்ற கல்வி போதனு முறையை மீண்டு உயிர்ப்பித்து அநுஷ்டிக்க நினைப்பதுமே தவறாகும். அப்படிச் செய்தால், பல நூற்றாண்டுகள் பின்னிட நேரும். பெஸண்டம்மையார் அப்படிச் செய்ய வேண்டுமென்று கூறவில்லை; ஆனால் இந்தியாவிலே அதன்மேல் ஆசை கொண்டுள்ள சில கூட்டத்தாரிருக்கின்றனர்.

இவர்கள், சில வேளைகளில், தங்கள் பழைய முறையில் சில அம்சங்களை அந்நியர் புகழ்வதைக் கேட்டு மிதமிஞ்சித் தலை கிறுங்கி விடுகின்றனர். ஒரு போதனுமுறை, கண்ணுக்குப் பகட்டாயும் காரியத்துக்கு உதவாததாயு மிருக்கலாம்; துரைத்தனத்தார் நோக்கங்களுக்கு அநுகூலமாயும் குடிகளுக்குப் பிரதிகூலமானதாயு மிருக்கலாம்; சிலர்க்கு மட்டும் நல்லதாயும், நாடனைத்துக்கும் பொதுவாய் அநுஷ்டித்தால் கேடு விளைப்பதாயு மிருக்கலாம். அந்நியர் நமது புராதன கிரந்தங்களையும் போதனு முறையையும் புகழ்வதைக் கேட்டு, நம்மவர் தலைகிறுங்கிவிடக் கூடாது. அவர்களில் சிலர், தங்கள் வாழ்க்கை முறைகளில் வெறுப்புற்று இவ்வாறு பேசுகின்றனர்; சரியானபடி இரண்டையும் சீர்தூக்கிப் பார்த்து நிதானிப்பதில்லை, வேறு சிலர், நமக்கு முகஸ்துதியாய் அப்படிப் பேசுகின்றனர். அவர்கள் புகழ்ச்சியாலும் நிந்தையாலும் நாம் கலங்கிவிடக் கூடாது. நமது வாழ்க்கையில், அதி முக்கியமான, வெகு கஷ்டமான, ஒரு அவஸ்தையில் இப்பொழுது நாம் இருக்கிறோம். எல்லா விஷயங்களையும் செவ்வையாய்ச் சீர்தூக்கிக் கவனித்து, உண்மையை அறிந்து நிதானித்து, அதன் பிறகே நமது ஜன சமூகத்தின் அபிவிருத்திக்கும் முன்னேற்றத்துக்கும் ஏற்ற முறைகளையும் ஏற்பாடுகளையும் தீர்மானிப்பது, நமது கடனுகும். உள்ள நிலைமையை ஆழ்ந்து ஆலோசனை செய்வதே முதல் அவசியம்; அப்பால்தான், மேல் நடத்த வேண்டிய விஷயங்களை நிச்சயிக்க வேண்டும்.

(தொடரும்)

---



# சிசு மரணம்

## அதன் காரணங்களும் பரிகாரங்களும்


ஸ்ரீமதி Dr. S. முத்துலக்ஷ்மியம்மாள், M. B. & C. M.,
சென்னை.


(40-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

நமது சமூகத்திலே படித்துள்ளவர்கள் அடங்கிய நடுத்தரமான ஜனங்களின் நிலைமையை, இனிக் கவனிப்போம். தாம் பேசும் தாய் மொழியை எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள், மொத்த ஜனத்தொகையில், நூற்றுவரில் 9 பேரும்; ஸ்திரீகளுக்குள் நூற்றில் இரண்டு பேருமாயிருக்கையில், நாமும் ஓர் அறிவொளி விளங்கும் சமூகத்தார் என்று பேசிக்கொள்ள முடியாது. படித்தவர்கள் என்றால், அநேகமாய்ப் புருஷர்களை மாத்திரம் குறிக்கிறது; ஸ்திரீகள் படியாதவர்களே. புருஷர் படிப்பு, ஜீவனோபாயத்துக்கு வேண்டிய பொருளைச் சம்பாதிப்பதற்குத் தவிர, வேறு விதமாகக் குடும்பத்துக்குப் பிரயோசனமாவதில்லை. இவ்வாறு படித்த குடும்பங்களைச் சேர்ந்த பெண்கள், ஏழைப் பெண்களைவிட, நல்ல வீடுகளில், அதிக சுக சௌகரியங்களோடு வாழுகின்றனர் என்பதில் சந்தேகமில்லை; ஆனால், தங்கள் குழந்தைகளை வளர்க்கும் அம்சத்தில், ஏழைகளான (படிப்பில்லாத குடும்பங்களைச் சேர்ந்த) பெண்களைப்போல்தான், இவர்களும் அறிவில்லாதவர்களா யிருக்கிறார்கள். பரீக்ஷைகளில் தேறி பி. ஏ. பட்டமும், பி. ஏ; பி. எல்; பட்டங்களும் பெற்ற புருஷர்களின் மனைவிமார், அம்பட்டச்சிகள் மருத்துவத்தினால், ஏழை ஸ்திரீகளைப் போலவே, அவஸ்தைப்பட்டு வருந்துவதை நான் பார்த்திருக்கிறேன். 'படித்தவர்' என்று பேர் வைத்துக்கொண்டிருக்கும் இந்த மேதாவிகள், அறியாமையும் மௌட்டியமுமே மிகுந்த தங்கள் வீட்டு முதியோர் இஷ்டப்படி எல்லாவற்றையும் தாங்கள் விட்டு விடுகிறதைப்பற்றிப் பெருமை பேசிக்கொள்கிறார்கள். இதனால் எல்லாம் கோளாறாகிக் கெடும்பொழுது, மேல் நாட்டு வைத்திய முறைகளை அநுசரித்துத் தங்களைப் பெற்றவர்களின் இஷ்டத்துக்கு விரோதமாகத் தாங்கள் நடக்க விரும்பவில்லையென்று, தங்கள் மனத்தைச் சமாதானஞ் செய்து கொள்கிறார்கள். இவ் வண்ணமாக, படிப்பில்லாத மூத்தோர்களின் வார்த்தையை மீறி நடப்பதைக் காட்டிலும், தங்களுக்குப் பிரியமான மனைவிமார், குழந்தைகளின் உயிர்களை ஆபத்துக்

குள்ளாக்குகிறார்கள். இதுதான் புருஷர்களின் படிப்பினால் இவர்களுடைய மனைவி மக்களுக்கு விளையும் நன்மை!

படித்த புருஷர்கள் நூற்றுக்கணக்காக மாதந்தோறும் சம்பாதிப்பவர்கள், தகுந்த மருத்தவ உதவியும் சௌகரியங்களு முள்ள பட்டணங்களில் உத்தியோகஞ் செய்பவர்கள், படிப்பில்லாத தங்கள் பெற்றோர்களின் பேச்சைக் கேட்டு, சூலுற்ற தங்கள் மனைவிமாரை, சுற்றிக் காதவழி தூரத்துக்கு மருத்துவ உதவியே யில்லாத குக்கிராமங்களி லுள்ள அவர்கள் பிறந்த வீடுகளுக்குப் பிரசவத்துக்கு அனுப்புவதையும்; ஏதாவது ஆபத்து விளைந்து, காரியம் கை கடந்துபோக விட்டு, தம் செயலுக்காகப் பரிதாபப்பட்டு வருந்துவதையும், நான் கண்டிருக்கிறேன். படித்தவர் வகுப்பைச் சேர்ந்த ஜனங்களில் ஒரு பகுதியார், படிப்பிருந்தும் தங்கள் பழைய வழக்கங்களைக் கைவிட மனமில்லாதவரா யிருக்கின்றனர் எனினும்; அவர்களில் சிலர், புதிய மருத்துவ முறைகளின் நன்மையை அறிந்து, அவசியமான காலங்களில், ஸர்க்கார் ஆசுபத்திரிகள், முனிஸிபல் தாதிப் பெண்கள் (நர்ஸுகள்), மருத்துவச்சிகள் முதலியோரின் உதவியை, இப்பொழுது, நாளுக்கு நாள், அதிகம் நாடி வருகின்றனர். முன் ஆலோசனையோடு, நோய் விலக்கு முறைகளை இவர்கள் அநுஷ்டிக்கா விட்டாலும், உற்ற தருவாயில் தக்க மருத்துவ உதவியை நாடியடைந்து, (பிரசவத்துக்குப்) பின் சிக்கல்கள் நேராதபடி காத்துக் கொள்ளும் அளவு, இவர்கள் புத்திசாலித்தனமாய் நடக்கின்றனர்.

இப்பால், பணம் பெருத்த பண்ணையார்கள், வியாபாரிகள், ராஜாக்கள், ஜமீன்தார்களைப் பற்றிப் பேசுமிடத்து, இவர்கள், பெரிய மாளிகைகளிலும் பங்களாக்களிலும் வசிக்கின்றனர், மோட்டார் வண்டிகளில் உலாவித் திரிகின்றனர், வைரங்களையும் பட்டு பீதாம்பரங்களையும் அணிகின்றனர் என்பதைத் தவிர, அறியாமையிலும் மூடக் கொள்கைகளிலும், பரம ஏழைகளுக்கும் இவர்களுக்கும் வித்தியாசமே யில்லை. இவர்களுடைய தேச பக்தியை மிக்க வைதிக சிரத்தையோடு, நாட்டின் பழைய வழக்கங்களின்படி இவர்கள் நடப்பதில்தான் காணலாம். தங்கள் மனைவிமாருக்கு மருத்துவம் செய்ய அம்பட்டச்சிகளை முதலில் அழைக்கின்றனர்; கோளாறுகி நோய் சிக்கலுற்ற பிறகே, வேறு தகுந்த மருத்துவ உதவியை நாடுகின்றனர். மற்ற வகுப்பு ஜனங்களிற் போலவே இவர்களுக்குள்ளும், சாஸ்திரோக்தமான மருத்துவ சிகிச்சையின் யோக்கியதையை அறிந்து, தற்கால நாகரிகத்துக்குப் பொருந்த நடப்பவர், ஒரு சில புருஷரும் ஸ்திரீகளும் இருக்கின்றனர்.

ஜனசமூகத்தில் நடைபெறும் தீய வழக்கங்கள் :— பிராமணர்களுக்குள்ளும் வைசியர்களுக்குள்ளும் நடைபெறும் பாலிய விவாக



வழக்கமே, அவ்விரு சாதிகளில், தாய்மாரும் குழந்தைகளும் அகால மரணமடைவதற்கு ஒரு முக்கிய காரணம். ஒரு மனையாட்டிக்கும் தாய்க்கும் உரிய கடமைகளும் பொறுப்புக்களும், அவற்றைச் செவ்வையாக நிறைவேற்றுதற்கு வேண்டிய சரீர வளர்ச்சி முதிர்ச்சியும் மன மலர்ச்சியுமில்லாத 12—13 வயதுச் சிறுமியின்மேல், சுமத்தப்படுகின்றன. பூர்ண கர்ப்பத்துக்கு வேண்டிய அளவு இடுப்பெலும்புகள் முதிர்ந்து பலப்படாமையால், அடிக்கடி கர்ப்பம் சிதைந்து விழுந்துவிடுகின்றது. அப்படிக்கின்றி சூல்முற்றிப் பிரசவமானாலும், இந்தக் குழந்தைத் தாய்களுக்குப் பிறக்கும் சிசுக்கள், ஆரோக்கிய திட சரீர மின்றி, பலவிதமான சிசு வியாதிகளுக்கு எளிதில் உள்ளாகின்றன. இந்தத் தாய்மார்களுக்கு, வெகுவாய், போதுமான தாய்ப்பா லிருப்பதில்லை; குழந்தைகளைக் கைவலமாக வளர்க்க வேண்டியதாகிறது; அப்படி வளர்ப்பதனு லுண்டாகும் அபாயங்களால், இவர்கள் குழந்தைகள், போஷணைக் குறைவால் நேரும் கணை நோய்கள், சோகை, வயிற்றுக்கட்டி முதலிய நோய்களுக்கு இரையாகின்றன. பிராமணக் குழந்தைகளுக்குள் வயிற்றுக்கட்டி விசேஷமாய் நேருவது, என் அநுபவம். இந்தப் பிராமண யுவதிகள், அடிக்கடி கருச்சிதைந்து விழுந்தும், பிள்ளைப் பெற்றும், நோயும் பாயுமாச் சீரழிக்கும் ஐந்தாறு குழந்தைகளுள்ள குடும்பத்தை நிர்வகித்தும், துன்பத்தில் அழுந்திக் காலங் கழிக்கிறார்கள். இத்தனை கஷ்டங்களோடு தரித்திரமும் அஞ்ஞானமும் சேர்ந்து, கணவர்களின் அநுதாபமும் அன்பும்கூட இல்லாமற் போனால், இவர்கள் கதி எவ்வளவு துக்ககரமான தாகு மென்று, நாமே ஊகித்துக் கொள்ளலாம். இப்படிப்பட்ட பல பிராமண குடும்பங்களிலே, கணவர்கள் படித்தவராயிருந்தும், அடிக்கடி பிள்ளைப் பெறுவதனாலும் கருச்சிதைந்து விழுவதனாலும் தங்கள் அருமை மனைவிமார் பலவீனப்பட்டு வருந்துவதை நன்கு அறிந்தவராயிருந்தும், தங்கள் ஆசை மனைவிமார் படும் கஷ்டத்துக்கு இரங்காமலும், தங்கள் அருமை மக்களின் க்ஷேமத்தையுமே மதியாமலும், மிருகத்தனமான தங்கள் சிற்றின்பத்தையே கருதி, அதை விட்டுக்கொடுக்காமல் ஒழுகுகின்றனர். தாய்மாரும் குழந்தைகளும் அபரிமிதமாய் அகால மரணம் அடைவதற்கு அம்பட்ட மருத்துவச்சி, மற்றொரு முக்கிய காரணம். சென்னையைப்போன்ற நகரங்களிலுமே, மிகப் பல ஜனங்கள், அழுக்குப் பிடித்த இந்த மருத்துவச்சிகளின் உதவியைத் தேடுகின்றனர்; அறியாமையும், இல்லாமையும், பல தலைமுறைகளாய் வரும் வழக்கமுந்தான், இதன் காரணம். பிரசவ காலத்தில்,—அதிலும், நீடித்த கஷ்டப் பிரசவங்களில்-இந்த மருத்துவச்சிகள் செய்யும் சாஸ்திர விரோதமான ஒழுங்கீனங்களால், விஷ ஜன்னியும் களைப்பும் உண்டாகி, பல

தாய்மாரும் குழந்தைகளும் சாகின்றனர். இந்த மருத்துவச்சிகள், குழந்தையின் தொப்புள் கொடியை அலட்சியமாய்க் கட்டுவதும், ஏறுமாறாக இவர்கள் கையாடுவதும் தான், பிறந்து சில நாள்களுக்குள் குழந்தைகள் சாவதன் காரணம். இவர்கள் அறுவல் குழந்தை பிறந்ததோடு நின்றுவிடாமல், பிரசவத்தீட்டுக் கால முழுதும் நடக்கிறது. ஆமணக் கெண்ணெயையும், கஷாயங்களையும், வயிற்றைப் புண்ணுக்கும் வேறு கார மருந்துகளையும், பிறந்த சிசுவுக்கு இவர்கள் மிதமிஞ்சிக் கொடுப்பதனால், சிசுவின் வயிறு கெட்டுப்போய், நாளடைவில் அசௌக்கியம் உண்டாகிறது. குழந்தைக்கு விசேஷ தேக பலமும் ஜீவ சக்தியும் இருந்தாலொழிய, இபற்கை விரோதமான இந்த மருத்தீடுகளை அதனால் தாங்கமுடியாமற் போகிறது.

(தொடரும்)

# பலதுறைப் பொறுக்குமணிகள்

## பத்திரிகை ஆராய்ச்சி

(57-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

### I. மதவிஷயக் குறிப்புக்கள்

3. மதம் மாறுதல்—புனு பெர்கூஸன் காலேஜ் தலையாசிரியராயும், அப்பால், பம்பாய் மாகாணத்துக் கல்வியிலாகா மந்திரியாயுமிருந்தவர் Dr. பராஞ்ச்பை. இவர், ஒரு ஹிந்துவானவன் கிறிஸ்தவனாகவோ, முஸ்லீமாகவோ; அல்லது, கிறிஸ்தவனே முஸ்லீமோ, ஹிந்துவாகவோ, முரட்டுத்தனமாயேனும் மறைவாயேனும் மாறுவதால், அடிக்கடி சமய வாதங்களும் கலகங்களும் நேருவதைத் தடுக்கும் பொருட்டு, ஒவ்வொரு மதமாற்றமும் ஒரு மாஜிஸ்திரேட்டின் முன்னிலையில் பதிவாக வேண்டுமென்று அபிப்பிராயப்படுகிறார். அப்பொழுது, சம்பந்தப்பட்ட இரண்டு மதங்களையுஞ் சேர்ந்த இரண்டு சாக்ஷிகள், இருக்கவேண்டும்; 21 வயதுக்குட்பட்ட மைனர்கள் மதமாறுவதாயிருந்தால், பெற்றவர்கள், அல்லது கார்டியன்களின் சம்மதம் பெறவேண்டும்; மதம் மாறுபவர்களை, அதிகாரியோ சாக்ஷிகளோ, வேறு அனுவசியமான கேள்விகள் கேட்கக்கூடாது; ரெஜிஸ்தர் செய்யாமல் ஒளிவாய் மாறுவது, ஒரு குற்றமாகத் தண்டிக்கப்படவேண்டும்; தம்பதிகளிலே ஒருவர் மட்டும் மதமாறினால், மற்றவர் வேண்டுகோளின் மேல் விவாகத்தை ரத்து செய்துவிடலாம்; புருஷன் மட்டும் மாறினால், மனைவி, தன் சீதனச் சொத்தைப் பெறுவ தன்றி, அவளுக்கு ஜீவனும்சமும் புருஷன் கொடுக்க வேண்டும்; குழந்தைகள், தம்பதிகளில் மதம் மாறாதவர் வசத்தில், தகப்பன் செலவில், வாழவேண்டும். இவ்வாறு சட்டம் ஏற்பட்டுவிட்டால், மதக்



கலகங்களும் திருட்டுத்தனமாய் ஏமாற்றி மதமாற்றஞ் செய்யும் அக்கிரமமும் நின்றுவிடு மென்பது நிச்சயம். இவர் அபிப்பிராயத்தில், இராஜாங்கம் மதப்பிரசாரத்துக்கு மேற்பட்டதாய், எந்த மதத்துக்கும் அநுகூலமோ பிரதிகூலமோ செய்யாததாய், எல்லா மதத்தினரையும் ஒரே மாதிரி நடத்தவேண்டும். மதம் என்பது, அவரவர் பிரத்தியேக அபிப்பிராயத்தையும் மனச்சாக்ஷியையும் பொறுத்திருக்க வேண்டுமே யன்றி, மதத்துக்கும் துரைத்தனத்துக்கும் சம்மந்தமிருக்கக் கூடாது. நாகரிக நாடுகள் இப்பொழுது இவ் வண்ணமே, திருந்தி வருகின்றன. இங்கிலாந்தின் ஜனசங்கையில், மதத்தைப்பற்றி விசாரிப்பதில்லை. பல மதங்கள் பெருகி நடைபெறும் இந்தியாவில், மதவேற்றுமைக் கலகங்கள் ஒழிந்து ஒற்றுமை பலத்தற்கு இது ஒரு நல்ல யுக்தியாகும்.

4. பிராமணன் யார்? மஹாத்மா காந்தி "யங் இந்தியா"வில் எழுதுகிறார்:—"ஹிந்து மதத்தின், மானுஷ விருக்ஷத்தின், புஷ்பங்களில் சிறந்தது பிராமணனே; அந்தப் பூ வாடும்படி நான் ஒன்றும் செய்யவேமாட்டேன். தன்னைக் காத்துக்கொள்ளும் சக்தி அதற்குண்டு; இதற்கு முன் எத்தனையோ புயற் காற்றுக்களுக்கு அது தப்பிப் பிழைத்திருக்கிறது. 'அதன் சுகந்தத்தையும் ஜோதியையும் திருட முயன்றார்கள்' என்ற பழி, அப் பிராமணர்களுக்கு வேண்டாம். பிராமணர்களைக் கெடுத்துத் தாழ்த்தி, அப் பிராமணர், உயர்ந்து வாழவேண்டு மென்று நான் விரும்ப வில்லை. இதுவரை பிராமணர் எய்தியுள்ள உயர் நிலையை அப் பிராமணரும் அடைவதே என் விருப்பம். பிராமணனாய்ப் பிறக்கவேண்டும்; பிரமண்ணியம் அப்படி யில்லை: நம்முள் நீசர்களும், மிகத் தாழ்ந்த நிலையினருமே, பிரம்மண்ணியத்தை முயற்சியால் அடையலாம்."

5. ஆசிரமங்கள் துருதலங்களின் பெருக்கம்:—"இந்தியன் ஸோஷ்யல் ரிபார்மர்" எழுதுகின்றதாவது:—"இப்பொழுது நமது நாட்டிலே ஆசிரமங்கள் பலவிடங்களில் தலை கிளம்பிப் பெருகிவருவது, சில அபாயங்களுக்கு இடமான விஷயம். உண்மையான ஞானத்தினாலும் பக்தியினாலும் தன் மதக் கோட்பாடுகளில் திருத்தமடைந்த ஒருவன், முழுதும் குணம் மாறி, சீலனாகக் கூடும். ஆனால், இரண்டு மூன்று வருஷங்கள் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்ததனால் மாத்திரம், இத்தனை வக்கீல்களும் பள்ளி உபாத்தியாயர்களும், உத்தம ஆசாரிய புருஷர்களாயும் குருசிகாமணிகளாயும் மாறி விடுவரென்று நம்பமுடியாது. நடுவயது கழிந்த புருஷர்களும் ஸ்திரீகளும், தங்கள் சாயுங் காலத்தை, அமைதியாய் ஆசிரமங்களில் கழிப்பதில் தடையில்லை; ஆனால், கதருடுப்பதைத் தவிர வேறு யோக்கியதை யின்றி, இவர்கள், வாலிபர்களுக்கு ஆசாரியர்களாகிவிடுவதை நாம் பலமாய், ஆக்ஷேபிக்கிறோம்."

6. தேவஸ்தான பரிபாலன உத்தியோகஸ்தர்கள்—சோதனைக்குச் சென்றால், மாலைகள் போட்டு மேளதாளங்களுடன் வரவேற்பதும், விருந்துகள், தமாஷா கச்சேரிகள் நடத்துவதும், தொடங்கிவிட்டன. ஆடம்பரமான வீண் செலவுகளை ஒழிக்கும் வழி இது வல்ல. இவை யொன்றும் கூடாதென்று, போர்டார் உடனே ஒரு ரூல் ஏற்படுத்திக் கண்டிப்பாய் மேற் பார்த்தல், முதல் சீர்திருத்தமாகும்.

### II. கல்வி விஷயக் குறிப்புக்கள்

3. பெண் கல்வி—இதைப் பற்றி, நமது நாட்டில், மற்ற விஷயங்களில் முற்போக்கான கொள்கைகளையும் உயர்ந்த மேல் நோக்கங்களையு

முடைய மேதாவிகளில் சிலருமே, பிற்போக்கான தப்பெண்ணம் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. இந்தக் காசிலே, கௌரவ பூரண V. S. ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளின் அபிப்பிராயமும், ஸ்ரீயுத லாலா லஜபதிராயின் அபிப்பிராயமும் ("இந்திய தேசியக் கல்வி" 2-ம் அதிகாரத்தை நோக்குக) காணலாம். இவ்விரு தலைவர்களும், அதிமேதையராயும், உலகானுபவம் மிக்கவராயும், உலகப் பிரசித்திபெற்ற இந்தியராயும், சிறந்த தேச பக்தர்களாயுமிருப்பதால், இவர்கள் அபிப்பிராயத்தை எல்லோரும் ஆழ்ந்து சிந்திக்கக் கடவர்.

4. 1921-ம் வருஷத்து ஜன சங்கியைக் கணக்கின்படி, சென்னை மாகாணத்தின் படிப்பின் நிலைமை, பின் வருவதனுல் ஒருவாறு விளங்கும். இந்த மாகாணத்திலே, 1857-ம் ஆண்டில், சென்னைச் சர்வகலாசாலை ஏற்பட்டது; எனவே, ஏறத்தாழ 70 ஆண்டுகளின் முன்னேற்றமிது :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஜன மொத்தம் | ஆண் | 21,100,158; | பெண் | 21,693,997 | =42,794,155 |
| படிப்பாளிகள் | ,, | 3,210,842; | ,, | 456,895 | = 3,667,737 |
| தற்குறிகள் | ,, | 17,889,316; | ,, | 21,237,102 | =39,126,418 |
| இங்கிலீஷ் தெரிந்தவர் | ,, | 357,928, | ,, | 44,405 | = 402,333 |

இதனுல், இந்த மாகாண ஜனங்களிலே, 14 பேரில் ஒருவருக்குத்தான் சிறிதேனும் படிக்கத் தெரியும் என்பது விளங்குகின்றது. திருவள்ளுவ நாயனுரின் வாக்குப்படி, மற்ற 13 பேரும் குருடரே யாவர்! இதே கணக்குப்படி, திருவாங்கூர் இராஜ்யத்திலுள்ள மொத்தம் 4,006,062 ஜனங்களில் 968,133 பேரும், அதாவது, 10 பேரில் ஒருவரும்; பரோடா ராஜ்யத்திலுள்ள மொத்தம் 2,126,522 பேரில் 272,418 பேரும் படிப்பாளிகளாயிருக்கின்றனர். ஆங்கிலேய துரைத்தனத்துக்கு, இக் கணக்கு விசேஷப் பெருமை தருவ தன்று.

## III. சொற் பொழிவுகள்

4. **ஹிந்துக்களின் ஜோஸியம்** :— கனம் திவான் பகதூர் L. D. ஸ்வாமிக் கண்ணுப்பிள்ளை (C. I. E; I. S. O: M. A; LL. B) ஜோதிஷ கணிதத்தில் தேர்ந்தவர், சிறந்த நூலாசிரியர் என்பதைப் பலர் அறிந்திருப்பர். மேமீ 4உ யன்று, அவர் 'இந்திய ஜோஸியத்தை யொட்டிய சில புதிய உண்மைகள்'' என்னும் விஷயமாய்,குன்னூரிலே பேசினுர். அவர் கூறியவற்றில், சகல ஜனங்களுக்கும் பொதுவான ஒரு உண்மையை மட்டும் இங்கே சொல்வோம்:—'' ஜாதகத்தை யனுப்பினுல், அல்லது, ஜன்ம லக்னத்தையும் நக்ஷத்திரத்தையும் குறித்தனுப்பினுல், வாழ்க்கையின் முழுப்பலனையும் எழுதி யனுப்புகிறேன் '' என்று, பலர் விளம்பரஞ் செய்வதும், பலர் அப்படி யனுப்பிப் பணம் கொடுத்துத் தமது வாழ்க்கை வரலாற்றைத் தெரிந்துகொள்வதும், பலர் ஜோஸியர்களுக்கு நற்சாக்ஷிப் பத்திரங்கள் எழுதிக்கொடுப்பதும், இக்காலத்திலே மும்முரமாய் நடக்கிறது. பிள்ளையவர்கள், இவ்விஷயத்தை விரிவாய் ஆராய்ந்து பார்த்தபின், உறுதியாய்க் கூறின தாற்பரியமாவது, இந்த ஜோஸியம் முழுப்புரட்டும் ஏமாற்றுமே யன்றி மெய்யல்ல, சாத்திய மு மல்ல; ஜோதிஷ சாஸ்திரக் கணக்குப்படி, ஒரு ஜோஸியனிடத்தில், 16,200 கோடி ஜாதகங்களும், அவற்றின் பலன்களும் அடங்கிய கிரந்தம் இருந்தால் தான், இப்படிச் சொல்லக்கூடும்; இப்பொழுது, இப்படிப்பட்ட



ஜோஸியப் புலிகள் கணிப்பதெல்லாம், '' எண்ணிச சுட்டது தோசை; தேடிப் பிடித்தது கழுதை '' என்று வரும் கதையிற்போல திருட்டுத் தனமாய் விசாரித்துத் தெரிந்துகொண்டு, ஜோஸியம்போற் சொல்வதேயாம்.' ஆனுல் சாஸ்திர உண்மை எப்படி யிருந்தால் என்ன? நம்மவர் மூடநம்பிக்கைக்குக் கணக்கேது வழக்கேது?

5. **புத்த ஜயந்தி**:—அன்று, மகாத்மாகாந்தி கல்கத்தாவில் பேசியபோது, சில அருமையான விஷயங்களை எடுத்துக் கூறிவிட்டு, முடிவில், "உண்மையும் அன்பும் ஒரே காசின் இரண்டு பக்கங்களாம்; அந்தக் காசு ஒன்றுதான் என்றும், எங்கும் செல்லுங்காசு; மற்றவை யெல்லாம் செல்லாக் காசுகளே'' என்று சொன்னுர். எட்வின் ஆர்நால்டு என்ற ஆங்கில கவி பாடியுள்ள '' ஆசிய ஜோதி *'' என்னும் புத்த சரித்திர காவியமே தான் புத்த மதத்தைப் பற்றிப் படித்த தென்றும், அந்தக் காவியத்தில் தனக்குள்ள பிரியத்தையும் பக்தியையும்பற்றிப் பேசினுர். ' ஹிந்து மதம் வேறு, புத்த மதம் வேறு என்று நான் எண்ண வில்லை. என் அபிப்பிராயத்தில், புத்தர் ஹிந்துவாகவே வாழ்ந்தார்...ஹிந்துமதக் கொள்கைகளைத் தினசரி வாழ்க்கையில் அநுசரித்து, அப்பியாசம் செய்வதுதான் புத்த மதம்'' என்றும் கூறினுர்.

## IV தொழில் விஷயம்.

1. **ஈய வியாபாரம்**:—பர்மா தேசத்தில் ஈயச் சுரங்க மிருக்கிறது. அந்தச் சுரங்கத்திலிருந்து, வருஷந்தோறும், சராசரி 144 லக்ஷ ரூபா விலையுள்ள ஈயம், பிற நாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது. இதிற் பாதி, சீமைக்கும்; மிகுதி, இலங்கை, ஜப்பான், சீனம் முதலிய நாடுகளுக்கும், போகின்றது. இப்படி யேற்று மதியான ஈயத்தில், சுமார் 40 லக்ஷ ரூபா விலையுள்ள ஈயப்பண்டம், சீமையிலிருந்து இந்தியாவுக்கு இறக்குமதியாக வருகிறது. பர்மா, இந்தியாவின் ஒரு பாகமே. இதைப்போல் மூடத்தன முண்டோ? பல்லாயிரம் மைல் வெண்ணெய்யை அனுப்பி, திரும்பி யங்கிருந்து நெய் கொள்வதும், வியாபார முறையோ?

2. **இராஜாங்க வேலைக்கூடம்**.—கூலி வேலை கிடையாமல் திரியும் ஏழைகளுக்காக, புதுக்கோட்டை ஸமஸ்தானத்திலே ஒரு வேலைக்கூடம் ஏற்படுத்தி, அவரவர்க்கு ஏற்றபடி, நூல் நூற்றல், நெசவு செய்தல், பயிர்த்தொழில், முதலிய வேலைகளைச் செய்யச் சொல்லிக் கூலி கொடுப்பார்கள்.

3. **இந்தியக் கூலிகள்**:—அஸ்ஸாமிலுள்ள தேயிலைத் தோட்டங்களுக்குத் தென்னிந்தியக் கூலிகளை அனுப்பக் கூடாதென்று, சென்னைச் சட்ட சபையில் நிறைவேறிய தீர்மானத்தைத் துரைத்தனத்தார் அங்கீகரிக்கவில்லை...பர்மா மாகாணத்துக்குக் கப்பலில் வரும் இந்தியக் கூலிகள் இனி ஒரு புதிய வரி கொடுக்க வேண்டுமென்று, பர்மா சட்ட சபை தீர்மானித்திருக்கிறது.

## V. சில்லறைக் கலம்பகம்.

9. இன்றியமையாத அவயவங்கள்—மனிதன் உயிரோடு வாழ்வதற்கு, வயிறு, பெருங்குடல், பித்தப்பை, கண்கள், காதுகள், மூக்கு, கால்கள், கை

* '' சித்தார்த்தன் ''—புத்த பகவான் திவ்ய சரித்திரம். தனித்தமிழ் நடையில், நாவல் முறையில், அழகாய் எழுதியது. '' ஆசிய ஜோதி 'யை இனிய எளிய தமிழ்க் கவிகளில் அமைத்தெழுதிய ஒரு பகுதியும் சேர்ந்துள்ளது. விலை 0-12-0; பஞ்சாமிர்தம் ஆபீசு, மயிலாப்பூர், சென்னை.

கள், மயிர், உதடுகள், இவை அவசியமில்லையாம்; சிறு நீர்க்காயும் சுவாசப் பையும் ஒவ்வொன்று போதுமாம்.

10. இயற்கை விநோதம்:—மூலஸ்தான நகரத்தில் (Multan) 2 தலை, 2 மூக்குக்கள், 4 கண்கள், 4 காதுகளோடு ஒரு குழந்தை பிறந்திருக்கிறதாம்.

11. இந்தியச் சிற்பி:—ஸ்ரீ பனீந்திர போஸ் என்ற வங்காளச் சிற்பி 16 வருஷங்களாக ஐரோப்பாவிலே சிற்ப சாஸ்திரம் பயின்று வருகிறார். அவர் திறமையை மெய்ச்சி, ஸ்கோத்லாந்து ராஜ சிற்ப சபையார், அவரைத் தம் சபையில் சேர்த்துக் கொண்டிருக்கின்றனர்.

12. திருச்சூர் லோகமானியக் கமிற்றி:—பறையர், புலையர், நாயாடிகள் முதலிய 'தீண்டாச் சாதி'யினருக்குக் கல்வி, கைத்தொழில்கள் கற்பித்து, கட்குடி வழக்கத்தை நிறுத்தி, மேன்மைப்படுத்த, இந்தக் கமிற்றி ஏற்பட்டிருக்கிறது. இது சிறந்த தேசத்தொண்டாகும்; தருமமுமாகும்.

13. உலகத்தில் உயர்ந்த பத்திரிகை;-"சிக்காகோ டெய்லி ட்ரைப்யூன்" தான் உலகத்திலே மிகப் பெரிய பத்திரிகையாம்; இது, அமெரிக்காவில் சிக்காகோ நகரத்தில் பிரசுரமாகிறது. இதன் கட்டிடம் 33 மேடைகளுள்ளது; ஒரு சிறு நகரம் போன்றது. இதற்குச் சொந்தமான காட்டிலுள்ள மரங்களிலிருந்து, சொந்த மில்களில் காகிதம் செய்யப்பட்டு, 'மோட்டார் லாரி' வண்டிகளில், நேராகப் பத்திரிகாலயத்துக்கு வருகிறது. பத்திரிகாலயத்தின் கீழ் 2 மாடிகளில், யந்திரங்கள், காகித சாலைகள் முதலியனவும்; 3வது மாடியில் அச்சுப் பொறிக்கும் கம்பாஸிடர்களும்; 4வது மாடியில் ந்யூஸ் டிபார்டுமெண்டும்; 5-6-7வது மாடிகளில் பத்திரிகைக் கணக்காளிகளும்; 8-9-10வது மாடிகளில் விளம்பர டிபார்டுமெண்டும்; 24வது மாடியில் பத்திராசியர்களும், 32வது மாடியில் பத்திரிகைக்கு விகட சித்திரங்கள் வரையும் ஜான் T. மக்கச்சியன் என்பவர் ஆபீசும், இருக்கின்றனவாம். இந்தப் பத்திரிகைக்கு அடுத்த படியிலுள்ளது 'ந்யூ யார்க் டைம்ஸ்" என்பது. இதன் பத்திரிகாலயம் 19 மாடிகள் உள்ளதுதான். இதன் அச்சுயந்திரங்களால், ஒரு மணி நேரத்தில், 24 பக்கங்கள் அடங்கிய பாகத்தில், 4 லக்ஷம் பிரதிகள் அச்சடிக்கலாம்; இந்த ஆபீஸில் தினந்தோறும் 175டன் காகிதமும், 4டன் மையும் அச்சடிப்பதில் செலவாகின்றன. காகிதம் மைகளின் விலை மட்டும் ஒரு வருஷத்தில் 180 லக்ஷம் ரூபாவாகும். 19 மேடைப் பத்திரிகாலயத்தில் இவ்வளவானல், 33 மேடைப் பத்திரிகாலயத்தில் எவ்வளவாகு மென்று ஊகித்துக் கொள்ளலாம்.

14. பத்திரிகைகள்: அன்றன்று நடக்கும் செய்திகளை பரவச் செய்யும் வழக்கம், முதல் முதல் கி. மு 2300க்கு முன்பு சீனுவில் உண்டாயிற்று. செய்திகளைக் கவிகளாகப் பாடித் தெருக்களில், பலர் அறியும்படி, பாடி வந்தனர். சீனுவின் தென் பாகத்தைச் சேர்ந்த ட்ஸாய்லூன் என்பவன் கி. பி. 75-ம் ஆண்டில் காகிதத்தை உண்டு பண்ணினான்; அதற்கு 100 வருஷங்களுக்குப் பின் சீனுவிலே அச்சடித்தல் கண்டு பிடிக்கப் பட்டது; ஆனல் இது கட்டைகளில் வெட்டுவதாகும். சீன தேசத்து பீஷெங் என்பவன் கி. பி. 1045ம் ஆண்டில் 'டைப்'களை முதல் முதல் உண்டாக்கினன். அமெரிக்காவில் முதல் பத்திரிகை ஏற்பட்டது 25-9-1690ல் தான்; அதாவது 235 ஆண்டுகளுக்கு முன்பே. இச்சிறுகாலத்துக்குள், மேலையர் யுக்தி புத்தி முயற்சிகளால், மேலே கூறிய "சிக்காகோ டெய்லி ட்ரைப்யூன்" போன்ற பத்திரிகையை வளர்த்து விட்டனர்.



15. லோகோபகார நன்கொடை:—அமெரிக்காவிலே கோடீசுவரப்பிரபுவான ஸைமன் குக்கன்ஹீம் என்பவர், வருஷந்தோறும் 60 வித்தியார்த்திகள் அறிவுவிருத்தியின் பொருட்டு உயர்தரக் கல்வி ஆராய்ச்சி செய்வதற்கென்று, 90 லக்ஷம் ரூபா மூலதனம் வைத்திருக்கிறார். அதன் வருமானத்தைக் கொண்டு, ஆளுக்கு 7500ரூ வீதம், ஆண்டுதோறும் அறுபது அறிவாளருக்கு, மேற்படிப்புச் செலவுக்குப் பணமுதவப்படும். சாதி மதம் நிறம் என்ற பேதமில்லாமல், புத்திக்கூர்மையையும் கல்வித் தேர்ச்சியையும் மாத்திரம் கவனித்து, வித்தியார்த்திகள் தெரிந்தெடுக்கப்படுவர். அவரவர் கற்றுத் தேர்ந்த கல்வித் துறையில், அவரவர்க்கு இஷ்டமான அயல் நாடுகள் சென்று, இந்த வித்தியார்த்திகள் உயர்தர ஆராய்ச்சி செய்யலாம். எப்படியாவது அறிவு விருத்தியாகி, உலகம் முன்னேற்றமடைய வேண்டும் என்பதே, குக்கன்ஹீம் கருத்து. இவர் தந்தையார், ஓர் ஏழை மூட்டை தூக்கிச் சில்லறை வியாபாரியா யிருந்தாராம்; இப்பொழுது இவரோ, பலசுரங்கங்களுக்குச் சொந்தக்காரரும் கோடீசுரப் பிரபுவுமா யிலங்குகிறார். தாசிகளுக்கும் வேசிகளுக்கும் லக்ஷக்கணக்கான பணத்தையும் நகைகளையும் வாரிக் கொடுத்தும், அரமனைகளிலும் ஆடம்பரங்களிலும் பொருளை வாரியிறைத்தும் பாழாக்கும் நம் நாட்டுச் சுதேச ராஜாக்களும் பிரபுக்களும், இப்படிப் பரோபகாரமான விஷயங்களில் செலவிட்டால், அவர்கள் பேரும் கீர்த்தியும் நிலைநிற்கும்; உலகமும் நன்மையடையும்.

16. மனிதரின் ஆதிப் பிறப்பிடம்:—இமய மலையைச் சார்ந்த சிவாலிக் மலைப் பிரதேசத்திலே, வாலில்லாக் குரங்கின் எலும்புக் கூடுகள் இரண்டு தோண்டி யெடுக்கப்பட்டன. அமெரிக்காவிலிருந்து டாக்டர் ஹாட்லிட்கா என்ற மேதாவி வந்து, அவற்றைச் சோதித்துப் பார்த்ததில், அப்படிப்பட்ட வாலில்லாக் குரங்கிலிருந்துதான் மனித வர்க்கம் உற்பத்தியாயிற் றென்று யூகிக்கிறார். அந்த ஆதி-மனித-வானரங்கள் தேகஅமைப்பில், நாம் இப்பொழுது இருப்பது போலவே யிருந்தன. கடந்த ஐந்து லக்ஷம் ஆண்டுகளாக, மனிதர், மூளை வளர்ச்சியிலும் புத்தியிலும் மாத்திரம் பரிணமித்து வந்திருக்கின்றனர்; இன்னும் ஐந்து லக்ஷம் வருஷங்களுக்கும், அவ்வாறே புத்திக் கூர்மையில் மட்டுந்தான் விருத்தியடைவர்; உடற்கூறுகளில் மாறுதலிராது. இதனல், இமயமலைப் பிரதேசமே மானிட வர்க்கத்தின் ஆதி உற்பத்தி ஸ்தானம் என்று துலங்குகிறது.

17. படுக்கையில் புஸ்தகம் படித்தல்-படுக்கையில் புஸ்தகம் படித்தல் கெட்டதென்று சொல்வதுண்டு. கண் வைத்தியத்தில் சிறந்தவர்கள், 'இந்த வழக்கத்தினல் பாதக மில்லை; போதுமான வெளிச்சம் வாசிப்பவரின் பின்புறத்திலிருந்து, படிக்கும் புஸ்தகத்தின் மேல் விழுந்தால், ஒரு தீங்கும் நேராது; வெளிச்சம், படிப்பவரின் முன் புறம் இருந்தால்தான் கெடுதி மாம். என்று கூறுகின்றனர்.



## மதிப்புரைகள்.

(86-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

5. எங்கள் ஊர் :—(ஸ்ரீ. W.V. கோவிந்தஸ்வாமிராஜு, B.A..L.T., இயற்றியது; விலை ரூ 1. டாஸ் பிரஸ், விருத்தாசலம்) இந்தப் புத்தகத்தில் கொங்கு நாட்டின் வர்ணனையும் அந்த நாட்டின் வழக்க ஒழுக்கங்களும் வெகு நன்றாக எழுதப் பட்டிருக்கின்றன. முன்னிருந்த பழைய வழக்கங்களை விவரமாக எடுத்து எழுதியிருக்கிறார். காலப் போக்கால் அவைகள் பெரிதும் மாறிக்கொண்டிருக்கின்றன. இருந்தாலும் முன் வழக்கங்களை இனிமையாக இந்தப் புத்தகத்தில் எழுதி யிருப்பதுபோல எழுதி வைத்தால்தான் பின் வருபவர்களுக்கு முன் காலத்திய வழக்கங்கள் தெரியும். கொங்கு தேசம் மற்றைய நாட்டாருக்கு அதிகமாகத் தெரியாது; ஆகையால், இப்புத்தகத்தால் மற்ற நாட்டார் கொங்கு நாட்டின் வழக்க ஒழுக்கங்களைத் தெரியவும், கொங்கு நாட்டார் தங்கள் முன்னோர்களின் வழக்க ஒழுக்கங்களைத் தெரிந்து கொள்ளவும் கூடும். புத்தகம் நல்ல தமிழில் எழுதி யிருப்பதோடு, ஆங்கில முறையில் பெரிய ஆசிரியர் எழுதிய புத்தகங்களோடு ஒத்து நோக்கக் கூடியதாகவும், சந்தோஷமாகப் பொழுது போக்குக்கு உபயோகப் படுத்தக் கூடியதாகவும், எழுதப்பட்டிருக்கிறது. ஊர்ப்பண்ணடி, பட்டிநோன்பு, பொழுதுபோக்கு, முதலிய கொங்கு நாட்டுக்குப் பிரத்தியேகமான வழக்கங்களையும் விவரிக்கின்றன. எங்கள் நாடு, எங்கள் ஊர், என்ற தலைப் பெயரிட்ட அத்தியாயங்கள், கொங்கு நாட்டின் வர்ணனை. தற்காலத்திய நாவல்களில் சிலபோலில்லாமல், இம்மாதிரியான புஸ்தகங்கள் படிப்பவர்களுக்கு விஷயம் தெரிவிக்கவும் காலப் போக்குக்கும் சேர்ந்து உபயோகப்படக் கூடும்.

T. A. R.

6. சுவர்ணம் புஜம் 1923. } ஸ்ரீ. G. B. மஹாலிங்கையர் இயற்றிய நாவல்கள். மாருதி புஸ்தக சாலை—திருவல்லிக்கேணி
7. விஜயா-விமலா 1924. }

8. நபிகள் நாயகமும் நான்கு தோழர்களும் :—1923 ஸ்ரீ. பா. தாவுத்ஷா இயற்றியது—விலை ரூ 2—தபால் பெட்டி நெ 15. சென்னை.

இம்மூன்று பழைய பிரசுரங்களையும் அனுப்பியவர்க்கு வந்தனம்—ப-ர்.

## பத்திராதிபர் தபாற் பெட்டி

(75-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

*From* Mr. A. RANGASWAMI IYENGAR,
B.A., B.L., M.L.A.,
Editor, சுதேசமித்திரன்.

"** I was just glancing this morning over your new number and I must say that it contains quite a lot of interesting and varied matter. I hope you will maintain the high standard you have set in this number."—7—5—1925.

## கட்டை வண்டி மாரிமுத்து

ஒரு சிறு கதை

சிவி. மா. அனந்தநாராயணன், சென்னை.




ரிமுத்து கட்டைவண்டி இழுப்பவன். அவன் மார்பிலும் தோள்களிலும் அதிகமாய்த் தொங்கு சதை கிடையாது. ஆனால், அவன் தசை நார் ஒவ்வொன்றும் இரும்பைப் போல் கடினமானதாய்ப் புடைத்திருக்கும். அவன் உள்ளங்கைத் தோல் சொர சொர என்றிருக்கும். "பத்துப் பேய் வந்தாலும் மாரிமுத்து பார்ப்பான் ஒரு கை" என்று, அவன் உறவினர் சொல்வதுண்டு. கள்ளுக் கடையில் மதுபானம் செய்பவர் எல்லோரும் தலை கிறுங்கி விழுந்தபிறகும், மனங்கலங்காமல் மாரிமுத்து குடிப்பான். விரிந்த இலை யொன்றில் புழுங்கலரிசிச் சோற்றைக் குன்று போல் குவித்து, அதன்மேல் மீன் குழம்பை ஊற்றி, மாரிமுத்து சாப்பிடுவான். "கோதா"விலும், "சடுகுடு"விலும், மாரிமுத்துவின் கைப்பிடிக்கும் உதைக்கும் நடுங்காத வாலிபர் இல்லை என்னலாம்.

இந்த வீமசேனன், ஒருநாள் சாயங்காலம், தன் வழக்கமான வேலையைச் செய்ய, விறகு தொட்டிக்குப் போய்க்கொண் டிருந்தான். அந்த வழியே அநேகமாய் ஒருவரும் போவதில்லை. அன்றைக்கு வெப்பம் பொறுக்க முடியாமல் இருந்தது. ஆகாயத்தில் ஒரு மேக மில்லை; மரங்களில் ஓர் இலை அசையவில்லை; பக்ஷிகள்கூட மௌனம் சாதித்தன. சரிகைத் தலைப்பாவும் கறுப்புக் கோட்டும் அணிந்த ஒருவர் மாத்திரம், மீசையை முறுக்கிக் கொண்டு, தன் முன்னால் போவதை, மாரிமுத்து பார்த்தான். பிறகு, ரஸ்தாவின் ஓரத்தில் ஒரு முடவன் உட்கார்ந்திருப்பதையும் கவனித்தான். அந்த முடக்கிழவன் கண்கள் ஒளி மங்கிப் பாதாளத்தில் ஆழ்ந்திருந்தன; உடம்பு, எலும்பும் தோலுமா யிருந்தது; முதுகு கூனல்; தலை, சருவதா நடுக்குவாதத்தால் ஆடிக்கொண் டிருந்தது. மாரிமுத்துவின் முன் நடந்தவர், அந்த முடவன் எதிரில் வரவே, அவரைக் கும்பிட்டுவிட்டு, "கால் இல்லாதவன், சாமீ! காலணு

கொடுங்க சாமீ!'', என்று, அவன் கெஞ்சிக் கேட்டான் அவர், சிறிதும் திகைக்காமல், சட்டைப் பைக்குள் கையைவிட்டு, ஒரு ரூபா நோட்டொன்றை எடுத்து வீசினர்; வேகமாய்ப் போய் விட்டார்.

இதற்குள் மாரிமுத்து வந்து சேர்ந்தான். நோட் விழுந்த இடம், முடவன் கைக்கு எட்ட வில்லை; எழுந்திருப்ப தென்றால் மிகப் பிரயாசையான காரியம். "அண்ணே, அந்த ரூபாக் கடுதாசியைக் கொஞ்சம் எடுத்துக் கொடுங்க, அண்ணே! கால் இல்லாதவன், அண்ணே!'' என்று, முடவன் கும்பிட்டான். மாரிமுத்து குனிந்து நோட்டை எடுத்தான். பிறகு, அக்கம் பக்கம் பார்த்தான்; ஒரு பிராணியும் இல்லை. அவன் கண்களில் ஒரு கொடுமையான ஒளி தோன்றிற்று. "யாரப்பா, பைத்தியம்! என்ன பேத்தராய்? தெருவிலே கிடந்தா உனக்கு மாத்திரம் என்ன?.......போ, போ, நாயே'' என்று சொல்லிவிட்டு நோட்டை மடியில் வைத்துக் கட்டிக் கொண்டு, குறுக்குப் பாதை வழியாய் அவன்மேல் நடந்தான். உரத்துக் கூப்பிடவும் கிழவனுக்குச் சக்தி யில்லை. அவன் கன்னங்களில் தாரை தாரையாய் நீர் வழிந்தது..........

தன் வேலை முடிந்தவுடன், மிகுந்த குதூகலத்துடன், மாரிமுத்து கள்ளுக் கடைக்குப் போனான். தான் செய்தது பாவமென்ற உணர்ச்சியாவது, கிழவன்மீது இரக்கமாவது, அவன் மனத்தில் உதிக்கவே யில்லை. அதிர்ஷ்டவச மென்று சந்தோஷப்பட்டான்; அன்று ஒரு கலயம் அதிகமாய்க் கள் குடித்தான். கடைக்காரன் துட்டுக் கேட்டபோது, தான் அபகரித்த நோட்டை அலக்ஷியமாய் மாரிமுத்து நீட்டினான். அங்கிருந்த பையன் ஒருவன், அதை மாற்றிவர, எடுத்துச் சென்றான். பத்து நிமிஷம் கழித்து, எல்லாரும் திகைக்கும்படி, பையனும் இரண்டு போலீசாரும் உள்ளே நுழைந்தார்கள்.

முதல் போலீசான், குடிசையைச் சுற்றி ஒரு விழிவிழித்தான்; "யாரப்பா மாரிமுத்து?'' என்றான்.

மாரிமுத்து, "நான்தானுங்க'' என்றான்.

"இந்த நோட்., உன்னுதா?''

"ஆமாங்க.''

"உன் கையில் எப்படி வந்தது?''

"தெரியாதுங்க.''

"ஏய், மாரிமுத்து, உஷார். இது கள்ள நோட்; சரியான பதில் சொல்லாவிட்டால், உன்னைச் சார்ஜ் செய்வோம்.''

மாரிமுத்துவுக்குத் திகில் பிடித்துவிட்டது. "ஒரு பிச்சைக்காரன், — கொடுத்தாங்க'' என்று தடுமாறினான்.



போலீசான், "நல்ல பாட்டி கதை. பிச்சைக்காரன் கொடுத்தானா? சரிதான், சரிதான்'' என்று சொல்லி, மாரிமுத்துவைப் பிடித்துக்கொண்டு, அவன் தேகத்தைப் பரிசோதித்தான். ஒருவித வஸ்துவும் அகப்பட வில்லை. உடனே, அவன் இருப்பிடத்தைச் சோதனைசெய்ய, எல்லாரும் புறப்பட்டார்கள். போகும் வழியில் போலீசார் எவ்வளவு பயமுறுத்தியும், மாரிமுத்து வாயைத் திறக்க வில்லை. கடைசியில் அவன் ஓலை வீட்டை அடைந்தார்கள்.

"இதுதான் என் குடிசைங்க; நீங்க என்ன வேணும்னாலும் பாருங்க. நான் இந்தப் பாவம் செய்யலைங்க; சாமிக்குத் தெரியுங்க'' என்றான், மாரிமுத்து. நாலு பானைகளும் சட்டிகளும் தான் அங்கிருந்தன. "என்னப்பா இது?'' என்று, ஒருவன் பானையிலிருந்து வெள்ளைக் காகிதமொன்றை எடுத்தான். பானையைத் தூக்கினார்கள். முப்பது கள்ள நோட்டுக்களும், ஒரு கள்ள நோட்டுண்டாக்கும் கருவியும், அகப்பட்டன. சித்தப் பிரமை பிடித்தவன் போல், ஒரு நிமிஷம் விழித்துவிட்டு, மாரிமுத்து, அலறியழுதான்.

கோர்ட் விசாரணையில், தனக்குத் துணைவர் யாருமில்லை என்றும், தான் குற்றஞ் செய்யவில்லை என்றும், மாரிமுத்து சாதித்தான். ஆனால், அந்தப் பக்கத்தில், வேறு சிலர் வீடுகளிலும், புது ருசுக்கள் கண்டுபிடிக்கப்பட்டன. மாரிமுத்துவின் சிநேகிதர்களே அவனை நம்ப வில்லை. நோட்டுக்களின் இரகசியத்தை அறிய முடியாமல், யாரோ தன் மேல் சூன்யம் வைத்ததாக, அவன் தனக்குள் தீர்மானித்தான். அளவில்லாத கோபமும் துக்கமும் அவனுக்குண்டாயிற்று. தெய்வம், கவர்ன்மெண்டார், தன் குடும்பம், கடைக்காரன், முடவன், எல்லோரையும், எள்ளளவேனும் பக்ஷபாத மில்லாமல், அவன் திட்டினான். குற்றவாளியின் பிடிவாதத்தினால், ஒரு மோசச் சூழ்ச்சியின் மூலத்தைக் கண்டுபிடித்து அதைத் தொலைக்க முடியாததற்காக வருந்தி, நியாயாதிபதி, குற்றவாளிக்கு இரண்டு வருஷம் கடுங்காவல் தண்டனை விதித்தார். மாரிமுத்து, தீர்ப்பைக் கேட்டவுடன், மூர்ச்சித்து விழுந்து விட்டான். பிறகு, எவனோ சிறைக்குப் போனவன் பாடிய பாட்டொன்றை நினைத்து, உள்ளம் புழுங்கினான்:—

செயிலுக்குப் போனால், அண்ணே — உன்னை
வெயிலிலே வாட்டுவாங்கோ;
மண் சுமக்கச் சொல்லு வாங்கோ — உடம்பெல்லாம்
புண் சுமக்கப் பண்ணு வாங்கோ;
கட்டி யடிப் பாங்கோ — தலைதன்னை
மொட்டை யடிப்பாங்கோ;
பசிக்கும் வேளையிலே — சோறில்லை,
புசிக்கக் கூழ்தான், அண்ணே.

* * * *

ஜில்லாஜெயிலில் 49-ம் நம்பர் கைதி, மாரிமுத்து. முதல் ஆறு மாதங்களில் அவன் பட்ட ஹிம்சைகளுக்கும் கஷ்டங்களுக்கும் அளவில்லை. ஆனால் நாள் கழியக் கழிய, தன் பணிவான நடத்தையால், மேற் பார்ப்பவரின் பக்ஷத்தைச் சம்பாதித்தான். தற்கொலை புரிந்து கொள்ளவேண்டுமென்ற விருப்பமும் அவனை நீங்கி விட்டது. அவன் முரட்டுத்தனம் மெதுவாக, அவனை விட்டு அகன்றது. தான் பட்டறிந்தவன் ஆகையால், மற்றவர் படுவதைக் கண்டு அநுதாபம் கொள்ளலானான். தன்னலத்தையே தேடுவதால் துக்கம் தான் உண்டாகுமென்றும், தன் வீட்டில் நோட்டுக்கள் அகப்பட்டது தெய்வ தண்டனை என்றும், அவன் எண்ண ஆரம்பித்தான். இவ்வாறு நினைப்பதால் சிறிது சாந்தத்தை அடைந்தான். தன் கூழ் முழுதையும் சாப்பிடாமல் சேமித்து வைத்து, உடல் மெலிந்தவர்களுக்குக் கொடுத்தான். இப்படி உபகாரம் புரிவதால் அவன் சந்தோஷப்பட்டான்.

ஒருநாள், மாரிமுத்துவைப் பார்த்து மற்றொரு கைதி:—"மாரிமுத்து! ஒரு ஆள் புதிசா வந்திருக்குது. விறகு வெட்டச் சொல்லி, அடைச்சுப் போட்டிருக்காங்க, பாவம்! கோடாலி தூக்க முடியலே. சும்மா அழுகுது" என்றான். வார்டர் முதுகு திரும்பின சமயம் பார்த்து, அங்கே போனான்.

யாரோ செல்வாக் குடையவன்போல் தோன்றும் ஒருவன், திகைத்துக் கொண்டு நின்றான். அவன் கைகள் மிருதுவாயிருந்தன.

மாரிமுத்து, மெள்ள அவனிடம் போய், "அப்பா, ஒனக்கிந்த வேலே உதவாது; செய்யாமப் போனாப் பிரம்படி. எனக்கு விட்டுடு" என்றுசொல்லி, தன் வேலையையும் பாராட்டாமல், அரைமணி நேரத்திற்குள் விறகை வெட்டி முடித்தான்.

புதுக் கைதி அவனைப் பார்த்து:—"அப்பா, நீ யாரு ?" என்றான். மாரிமுத்து, "என் பேர் மாரிமுத்து. சாமி அறிய நான் குற்றம் செய்யலே; ஏதோ என் விதி; கள்ள நோட்டுக் கேஸ்" என்றான். புதுக் கைதியின் முகம் வெளிறிப் போயிற்று; கண்களில் நீர் பெருகிற்று. அவன், பேச முடிந்தவுடன் :—

"அப்பா, நான் ஒரு பாவி. என் தொழில் கள்ள நோட்டுக்களைச் செய்வது. முடவனுக்கு இரங்கி நான் தான் அந்த நோட்டைக் கொடுத்தேன். கொஞ்சதூரம் போனவுடன், திரும்பி அந்தப் பிச்சைக்காரனிடம் வந்தேன். நினைக்காமல் கொடுத்துவிட்டோம்: என்ன ஆகுமோ என்று பயந்தேன். அவன் சொன்னதைக் கேட்ட பின்பு, உன்னைத் தொடர்ந்து, உன் வீட்டைக் கண்டுபிடித்தேன். நீயோ ஈவிரக்க மில்லாதவன் என்று, நெஞ்சைத் தைரியப்படுத்திக்கொண்டு, என் சாமான்களை உன் குடிசையில் அப்பொழுதே கொண்டு வைத்து விட்டேன். வேறு ஒருவருக்கும் தெரியாது. என்னுடைய சகாக்கள் அகப்பட்டுக் கொண்டனர்: எனக்குப் பதிலாய்,நீ சிக்கிக்கொண்டாய். பலநாள் திருடன் ஒருநாள் அகப்பட்ட கதையாக, என்னை இப்பொழுது மாட்டிவிட்டார்கள். ஐயோ! நீ புண்ணியவான், நான் மகாபாவி; என் அஞ்சு வருஷமும் ஏழானுலும் ஆகட்டும், நடந்த உண்மையை வெளியிடப் போகிறேன்" என்று சொல்லித் தேம்பித் தேம்பி அழுதான்.

மாரிமுத்து, "இதெல்லாம் வேணும். நீ இரங்கின முடவனுக்கு நான் பாவம் செய்யலேயா ? நீ பாவம் செய்யலே. தெய்



வம் உன்னைக் கொண்டு என்னைத் தண்டிச்சுது; அது நல்லதுதான்; செயிலுக்கு வாராமப்போனா, என் மனசு நல்ல வளியிலே திரும்புமா? இனிமேலே, காடானாலும் நாடானாலும் எனக்குச் சம்மதம்தான். அதோ! வார்டர் சத்தம் கேக்குது; நான் போகிறேன்" என்று போய்விட்டான்.

"கண்ணீர் சோறுடன் கலக்க உண்ணாதவன்,
'விடிவு எப்பொழுது?' என இரவெலாம் வெய்துயிர்த்து,
வடிதா விழிநீர், மனம் ஏங்காதவன்,
விண்ணுறை தேவரை நினைந்து அறியானே"

என்று பாடி யிருக்கிறார், ஜெர்மானிய கவீந்திரர் கீதே.

# எங்கள் அயர்லாந்து வாழ்க்கை ஞாபகங்கள்

ஸ்ரீ T. ஆதிநாராயண செட்டியார், பாரிஸ்டர், M.L.C., சேலம்
(அவர் மனைவியாரின் உதவிபெற்று எழுதியது.

(45-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

## இரண்டாம் அத்தியாயம்.

முன் சஞ்சிகையில் இங்கிலாந்துக்கும் அயர்லாந்துக்கும் இடையில் குறுகிய சமுத்திரம் ஒன்றுதா னிருந்த போதிலும், இந்தத் தேசங்களின் ஜனங்கள் பல வகைகளில் வேறுபட்டவர்களென்று சொன்னோம். இதற்கு முக்கிய காரணமாக, அயர்லாந்து ஒரு தீபமாகத் தனித்து அமைக்கப்பட்டிருப்பதைக் கூறலாம். வெகு காலம் ரோமர் தேசத்தார் இங்கிலாந்தை ஆண்டு வந்தும், அயர்லாந்தில் அவர்கள் அடி வைத்தார்களில்லை யென்பதும், இதற்கு அத்தாக்ஷியாகும். இவ்வாறு இத் தேசம் தனித்து அமைக்கப்பட்டிருப்பதின் காரணமாக, இத் தேசத்தில், வேறு எந்தத் தேசத்தையும் இதற்கு நிகராகச் சொல்லக்கூடாத வண்ணம், பூர்வ கால சரிதைகளும் (Folklore) கதைகளும் (Legends) ஏற்பட்டு, இத்தேசத்துத் தற்காலத்து மேதாவிகளும் உலகத்தில் பிரசித்தி பெற்ற கவிகளுமாகிய ஏட்ஸ், சிங்க், "ஏ. இ" 'ஸ்டீபன் க்வின், முதலியவர்களால், நன்றாகத் திரட்டபட்டு வழங்குகின்றன.

இந்த அத்தியாயத்தில், அயர்லாந்து தேசத்தின் பூர்விக சரித்திரத்தை எடுத்து விவரமாகச் சொல்ல உத்தேச மில்லை. பின் வரும் விஷயங்களை நன்கு அறிவதற்குச் சாதகமாக எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு மட்டும், பிராசீன காலத்திலிருந்து ஆங்கிலேயர்

அரசர்களாக இந்தத் தேசத்தில் அடி வைத்த காலம் வரையில் இத்தேசத்தின் சரித்திரத்தையும், அக் காலத்தின் நாகரிக நிலைமையையும், எடுத்துரைப்பதே எங்கள் உத்தேசம்.

"தாரா" என்னும் பூர்விக நகரத்தில் ஒரு மத்தியஸ்தாபனம் ஏற்பட்ட காலம்வரையில், அயர்லாந்து தேசத்தின் சரித்திரத்தைக் கட்டுக்கதைகளிலிருந்து பிரித்து எழுதுவது சாத்தியமில்லாத விஷயம். சரித்திர ஆராய்ச்சிக்குத் தெரிந்த வரையில், வெளி நாடுகளிலிருந்து, அப்போதைக்கப்போது, "காய்டெல்ஸ்," என்னும் இனத்தாரும், ஸ்காத்லாந்திலிருந்து "பிக்ட்ஸ்" என்னும் மற்றொரு இனத்தாரும் உள்பட, அனேகர்கள் அயர்லாந்தில் குடியேறினதாகத் தெரியவருகிறது. இவ்வாறு குடியேறிய பல கூட்டத்தார்களில், "மைலேஷியர்கள்" என்னும் ஒரு கூட்டத்தைக் குறிப்பிட வேண்டியதாயிருக்கிறது. "சிதியா" என்னும் தேசத்திலிருந்து இவர்கள் ஆதியில் புறப்பட்டு, எகிப்து, க்ரீட், ஸ்பெயின், தேசங்களில் தங்கி, கடைசியில் அயர்லாந்து சேர்ந்ததாக ஏற்படுகிறது. அயர்லாந்து தேசத்தினர்களிடம், தற்போதுகூட, கிழக்குப் பிரதேசத்திலுள்ள ஜனங்களுக்கேற்பட்ட ஒழுக்கங்களும் சின்னங்களும் சில இருப்பதே, இதற்கு ஒருவாறு அத்தாக்ஷியாகும். தவிர, அத் தேசத்தில் இந்நும் அங்கும் இப்போதும் காணப்படும் வட்ட வடிவான கோபுரங்களும் இதற்கு ஆதாரமாகும். இந்த "மைலேஷியர்கள்" நெடுங் காலம் அயர்லாந்தை ஆண்டு வந்தார்கள். இதே காலத்தில்தான், அயர்லாந்து தேசம் "அல்ஸ்டர்," "மன்ஸ்டர்," "லென்ஸ்டர்," "கானுட்" என்று நான்கு பாகங்களாக முதல் முதல் பிரிக்கப்பட்டது.

மைலேஷியர்கள் ஆண்ட காலத்தில்கூட அயர்லாந்து தேசத்தின் சொந்த ஜனங்கள், உலிதியர்கள் என்பவர்கள், குடியிருந்து கொண்டு, சில பாகங்களை அரசாண்டும் வந்தார்கள். அவர்களில் "நயால் நோகுபலலக்" என்பவர், கி. பி. நான்காவது நூற்றாண்டில் புகழுடன் ஆண்டதாகவும், அவர், கல்விமான்களை நன்கு போஷித்து வந்ததாகவும் ஏற்படுகிறது.

தாரா என்னும் பட்டணமானது மைலேஷியர்களுக்கு ராஜதானியாக இருந்து வந்த போதிலும், கி. பி. 1000 வருஷம் வரையில் தேசிய அரசராகிய "நயால்" என்பவருடைய சந்ததியார்களும் அயர்லாந்தின் பெரும் பாகத்தை ஆண்டு வந்தார்கள். இந்தச் சிற்றரசர்களுக்குமேல், "மேல் அரசர்" (High King) என்று ஒருவரும் இருந்து வந்தார். ஆனால், இந்தக் கால (கி. பி. 1000) த்திலிருந்து ஆங்கிலேய அரசர் அயர்லாந்தில் அடிவைத்த காலம் வரையில், சரித்திரத்தில் முக்கியமாக வரையக்கூடியது, சிற்றரசர்களுக்குள் ஏற்பட்டிருந்த ஓயாத சண்டைகள் தான்.

ஆயினும், மத விஷயத்திலும், கல்வி அபிவிர்த்தி விஷயத்திலும், இந்தப் பத்து நூற்றாண்டுகளில், அயர்லாந்து அதிக கீர்த்தி பெற்று வந்ததென்றே சொல்லவேண்டும்.

கிறிஸ்து மதத்தை ஜனங்கள் ஏற்றுக் கொள்வதற்கு முன்னர், அயர்லாந்து எவ்வித மதத்தைத் தழுவியிருந்த தென்று உறுதி



யாகச் சொல்வதற்கில்லை. சில விருக்ஷங்களையும், கருவிகளையும், கல் தூண்களையும், ஜனங்கள் பூஜித்து வந்ததாகச் சொல்லவேண்டும். சூரியனையும் பஞ்சபூதங்களையும் பூஜித்து வந்ததற்கு, இப்போது தேசத்தில் காணப்படும் (Round Towers) கோபுரங்கள், நிராகரிக்க முடியாத ருசுவாகும். பூதங்களிலும் அமானுஷமான பிராணிகளிலும் இத்தேசத்தின் பூர்வீக ஜனங்களுக்கு நம்பிக்கை பூர்ணமாயிருந்த தென்பதற்குச் சந்தேகமில்லை. "ட்ரூயிட்ஸ்" (Druids) என்பவர்கள் தான், இவர்களுக்கு குருக்களாக இருந்து வந்தார்கள். அவர்கள் மாந்திரீகத்திலும் குறி சொல்வதிலும் திறமையுள்ளவர்களாகக் கருதப்பட்டு வந்தார்கள்.

கி.பி. நான்காவது நூற்றாண்டில்தான் கிறிஸ்தவமதம் அயர்லாந்தில் பிரவேசித்ததாகச் சொல்லவேண்டும். இன்றைக்கும் நாளைக்கும் கூட அயர்லாந்தைப் பாதுகாக்கும் குலதெய்வமாக கருதப்பட்டு வரும் செயிண்ட் பாட்றிக் என்னும் கிறிஸ்தவ ரிஷியின் காலத்தில்தான், அயர்லாந்தின் ஜனங்களைக் கிறிஸ்தவர்களாக ஆக்க முயற்சி செய்யப்பட்டதாகச் சொல்லலாம். இவர் காலத்திலும், இவருக்கு அடுத்தபடி கொண்டாடப்படும் பெரியாராகிய "செயிண்ட் கொலம்பா" என்பவரின் காலத்திலுந்தான், மதஸ்தாபனங்களும், பெரிய கோயில்களும் கட்டப்பட்டதுமல்லாமல், ஐரோப்பாவுக்கும், ரோமாபுரிக்கும், அயர்லாந்துக்கும் நெருங்கிய சம்பந்தம் ஏற்பட்டது. கி.பி. ஐந்தாவது நூற்றாண்டின் பின் பாதியிலும் ஆறாவது நூற்றாண்டிலும் அனேக மடங்கள் ஏற்படுத்தப்பட்டது மல்லாமல், பெயர் பெற்ற வித்தியா பீடங்களும் கலாசாலைகளும் ஏற்பட்டன. "க்ளோஸர்ட்" என்னும் ஊரில் ஸ்தாபிக்கப்பட்டிருந்த மடத்தில் மாத்திரம் சுமார் ,000 மாணாக்கர்கள் கல்வி பயின்று வந்தார்களென்றால், இத் தேசத்தில் பூர்விகத்தில் கல்விப் பயிற்சி எவ்வளவு நன்கு மதிக்கப்பட்டு வந்த தென்பது எளிதில் தெரியவரும். அக்காலத்துப் பாடசாலைகள் எப்பேர்ப்பட்டவை என்பதைச் சுருக்கமாக இங்கே குறிப்பிடுவது உசிதமாகும்: கொடிகளாலும், களிமண்ணாலும் கட்டப்பட்ட சிறு குடிசைகளும், ஏதோ இங்குமங்கும் மாத்திரம் கல்லால் கட்டப்பட்ட குடிசைகளும், இவற்றைச் சுற்றி ஒரு அகழும் இருந்தன. இந்தக் குடிசைகளைக் கட்டுவதும், ஆகாரத்திற்கு வேண்டிய தானியத்தைச் சாகுபடி செய்வதும், நதிகளில் மீன் பிடிப்பதும், பசுக்களை (பால்) கறப்பதும், மாணாக்கர்களுடைய அலுவலாகும். கல்வி கற்பிப்பது சட்டடங்களுக்குள்ளில்லாமல் வெற்று வெளியிலே தான். இவ்வாறு கல்வி கற்ற இந்நாட்டு மேதாவிகள் சில காலத்திற்குள் ஐரோப்பா முழுவதும் பரவிவிட்டார்கள். கல்வி பயிலுவதற்குச் சாதனங்கள் இவ்வாறு ஜாஸ்தியாக இருந்ததால் கல்விமான்கள் ஜாஸ்தியாக ஏற்பட்டு, ஒரு காலத்தில், ஜனங்களுக்கு இது ஒரு தொல்லையாயும் ஏற்பட்டது. பிழைப்பில்லாததால், இவர்கள் (கவிகள்) ஊர் ஊர் செல்வதும், பெரிய மனிதர்கள் சிற்றரசர்கள் வீடுகளில் அழைக்காமல் சாப்பாட்டுக்குப் போவதும், அங்கு வரவேற்கப்படாவிட்டால் அவர்களைத் தூஷித்துப் பாடல்கள் கவனம் செய்வதும், தொழிலாக ஏற்பட்டு விட்டது.

பிறகு, "டன்ஸ்ட்" என்னுமிடத்தில் ஒரு பரிஷத் கூடி, இந்தக் கல்விமான்களின் சங்கையைக் குறைத்தும் அதில் திறமையுள்ள

வர்களின் ஜீவனத்திற்காக மானியங்களை ஏற்படுத்தினர்; மற்றவர்களைப் பள்ளிகளில் உபாத்தியாயர்களாக ஏற்படுத்தினார்கள். இத்தனை கவிகளிருந்தும், அயர்லாந்தின் இக்காலத்து கவித்துவம். "சாகா" என்று சொல்லும் பாடல், வசனம், இவ் விரண்டின் கலப்புக் கிரந்தங்களுக்குமேல் உயர வில்லை.

கல்விப் பயிற்சியின் விருத்தி இவ்வாறிருந்தும், தேசத்தின் (political) ராஜீய நிலைமை மெச்சத்தக்கதாக இல்லை. சிற்றரசர்களுக்குள்ளிருந்த விரோதங்களினால் ஏழாவது (கி. பி.) நூற்றாண்டில் இந்தத் தேசமானது "வைகிங்கு" என்னும் ஜாதியாருக்கு உட்பட்டுவிட்டது. இந்த நூற்றாண்டின் முடிவில், தாரா என்னும் முக்கிய பட்டணத்தில் சிற்றரசர்களின் தர்பார் ஒன்று நடந்தேறியதாகவும், அக் காலத்தில் "இனி ஸ்திரீகள் யுத்தத்தில் போர் செய்யக்கூடாது" என்று தீர்மானம் செய்யப்பட்டதாகவும் சொல்வர். இதனால்இ க்காலத்தில் ஸ்திரீகள் யுத்தத்தில் போர் செய்ததாக ஏற்படுகிறது. கி. பி. எட்டாவது நூற்றாண்டின் முடிவில், மேல் அரசரின் (High King) அதிகாரம் குன்றிப் போய் விட்டதாகவும், தேசத்தின் சிறுசிறு பாகங்கள் சிற்றரசர்கள் கைவசமிருந்து வந்ததாகவும், இந்தச் சிற்றரசர்கள் ஒருவருக்கொருவர் போர் செய்து வந்தார்கள் என்றும், தெரிய வருகிறது.

இக் காலத்துப் பட்டாளங்கள் எவ்வகை யானவை யென்பதைக் கவனித்தால், ஒவ்வொரு சிற்றரசரின் கீழ் ஒரு சிறு போர் வீரர்களின் கூட்டமிருந்ததாகத் தெரியவருகிறது; ஒரு கூட்டத்திற்கும் மற்றொரு கூட்டத்திற்கும் அதிக ஒற்றுமை இருந்ததாக ஏற்பட வில்லை. தனித்தளகர்த்தர்களின் திறமைதான் குறிப்பிடத்தக்கதா யிருந்த தென்றும்; ஒரு கூட்டத்திற்கென்றே தனியான வீரத்தனம் வாய்ந்திருந்த தென்றும் சொல்ல இட மில்லை. இப்போர்ப்பட்ட பட்டாளத்தை, நன்றாகத் தயாரிக்கப்பட்ட ஒற்றுமையுடன் வேலை செய்யக்கூடிய வேறு பட்டாளம், எளிதில் வெல்லக் கூடு மென்பதை, இங்கு சொல்லத் தேவையில்லை. தவிர, இந்தப் பட்டாளங்கள் யுத்த காலத்திற் கென்றே அப்போதைக்கப்போது தயாரிக்கப்பட்ட கூட்டங்களே யல்லாமல், வருஷ முழுவதும் யுத்தப் பயிற்சி பெற்று வந்த கூட்டங்களல்ல.

கி. பி. 830-ம் வருஷத்தில், நார்வே தேசத்திலிருந்து "வைகிங்க்ஸ்" என்னும் கப்பல் போர் வீரர்கள் அயர்லாந்தின் மேல் படை யெடுத்து வந்தார்கள். முதலில் இவர்கள் கொள்ளைக்கென்றே வந்த போதிலும், நாளடைவில் அத் தேசத்தில் நிலையாக தங்கி விட்டனர்.

இப்போது அயர்லாந்தின் முக்கிய பட்டணமாக வழங்கி வரும் "டப்ளின்" நகரம், கி. பி. 840-ம் வருஷத்தில் ஸ்தாபிக்கப்பட்டதாகவும், பிறகு கூடிய சீக்கிரத்தில் வியாபாரத் துறைமுகமாக அது விருத்தி யடைந்ததாகவும், சொல்லப்படுகிறது. யுத்த தளவாடங்களுக்கு இது முக்கிய நகரமாக ஏற்பட்டு விட்டது. "வைகிங்க்" கூட்டத்தார் படை யெடுத்து வந்த போதிலும், தேசத்தை நாசம் செய்ததாகத் தெரியவில்லை. ஆனால் கி.பி. 848-ம்



வருஷத்தில் "டேன்ஸ்" என்பவர்களின் ஒரு கூட்டத்தார் கடல் மார்க்கமாகப் படையெடுத்து வந்தார்களென்றும், அவர்கள் தேசத்தைப் பலவாறு நாசம் செய்தார்களென்றும்; ஆனால் கொஞ்சகாலத்திற்குப் பிறகு இவ்விரு ஜாதியாரும் கலந்து, அவர்களுள் வித்தியாசங்கள் மறைந்ததாகவும், ஏற்படுகிறது.

இந்தக் காலத்தில் அயர்லாந்து தேசத்தின் ஜனங்கள் விவசாயத்தை முக்கிய தொழிலாகக் கொண்டிருந்ததாகவும், வெள்ளாட்டு வியாபாரம் அக் காலத்தில் இல்லை யென்றும், முத்திரை பொறித்த நாணயங்கள் அக் காலத்தில் இருக்கவில்லை யென்றும், தெரிய வருகிறது. இன்றைக்கும் நாளைக்கும் அயர்லாந்து தேசம் பெயர் பெற்றிருக்கும் சணல் நாரால் செய்யப்பட்ட (Linen) துணிகள், உயர்ந்த குணத்தோடு மனதிற்கு ஆனந்தத்தை உண்டு பண்ணக்கூடிய வண்ணம், வெண்மையானதாக அக் காலத்திலேயே யிருந்து வந்ததாக ஏற்பட்டபோதிலும், வேறு உயர்ந்த (Luxuries) வஸ்துக்களை, அக்காலத்தி லுள்ள ஜனங்கள் உபயோகித்து வந்ததாகத் தெரிய வில்லை. ஆனால் ஆடை ஆபரணங்களும், உயர்ந்த சாராயங்களும், வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டுச் சந்தைகளில் விற்கப்பட்டு வந்தன வென்பது திண்ணம்.

நாளாவட்டத்தில், துறைமுகப் பட்டினங்களில் வெளி நாடுகளுடன் வர்த்தகப் பெருக்கு ஏற்பட்டு, வெளி நாட்டினர்களும் அந்தத் துறைமுகங்களில் அதிகமாகக் குடியேறி வந்தார்கள். அயர்லாந்துக்கு ஆதியில் ஏற்பட்ட பெயராகிய "ஹீபர்னியா" என்னும் பெயர் மாறித் தற்போது வழங்கிவரும் பெயராகிய "அயர்லாந்து" என்னும் பெயருற்றதற்கும், இந்த வெளித் தேசத்தாரே காரணமானார்கள். கி. பி. ஒன்பதாவது நூற்றாண்டு வரையில், நார்வே தேசத்திலிருந்து குடியேறினவர்களுக்கும் "டேன்ஸ்" என்னும் கூட்டத்தாருக்கும் போர் நடந்துகொண்டே வந்தது. ஆனால் பத்தாவது நூற்றாண்டின் துவக்கத்திலேயே புராதன தேசியர்களான அயர்லாந்தின் போர் வீரர்கள் வெற்றிபெற ஆரம்பித்து விட்டார்கள். ஆனால் இந்தத் தேசிய அரசர்களுக்குள் கீர்த்தியும் புகழும் பெற்றவராகிய "ப்ரயன் போரு" என்பவர் காலத்தில்தான், அயர்லாந்து சுயேச்சை யதிகாரத்தை மீண்டும் கைப்பற்றியதாக சொல்லவேண்டும். இவர் 1002 முதல் 1014-ம் வருஷம் வரையில் அயர்லாந்தில் செங்கோல் செலுத்திக் குடிகளுக்குப் பலவித நன்மைகளைச் செய்து வந்ததுமல்லாமல், பக்ஷபாதமின்றி நியாயத்தைச் செலுத்தி வந்தார். கல்வியை அதிகமாக இவர் போஷித்து வந்தார். இவர் காலத்தில் அனேக கோயில்களும், குளங்களும், பாலங்களும், கோட்டைகளும், ரஸ்தாக்களும், நீர்ப்பாசன வாய்க்கால்களும் ஏற்படுத்தப்பட்டன வென்பது, சரித்திர மூலமாகவும் இன்றைக்கும் அயர்லாந்தில் வழங்கி வரும் பாடல்களாலும், ஏற்படுகிறது.

"நார்வே" தேசத்துப் பட்டாளங்களை ப்ரயன் போரு, "க்ளாண்டார்பு" என்னும் போர்க்களத்தில் தோற்கடித்தா ரென்றும், அவருக்கு அந்த யுத்தத்தில் காயமேற்பட்டுக் காலகதியை யடைந்தார். அவருக்குப் பிறகு அயர்லாந்து தேசம் சீர்கெட்டு வந்த தென்றே சொல்லவேண்டும். ஏனென்றால், எல்லோரையும்

ஒன்று சேர்த்துத் தேசத்தை அப்போது ஆண்டு வந்த "தார்டெல் பாக் ஓ கானர்" என்பவர், "ஓரூர்க்" என்னும் இன்னொரு அரசர் தனக்கு எதிரிடையாகப் படையெடுத்து வருவதைக்கேட்டு, தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, இங்கிலாந்தை ஆண்டுவந்த இரண்டாவது ஹென்ரி என்னும் அரசரை, கி. பி. 1152-ம் வருஷத்தில் அழைத்தார். இதற்குப் பிறகு, அயர்லாந்து தேச சரித்திரத்தில் ஒரு புது அத்தியாயம் தொடங்குகிறது.

(தொடரும்)



## மதுவிலக்கு

1. பம்பாய் மாகாண மதுவிலக்கு மசோதா:—பம்பாய்ச் சட்ட சபையில் ஸ்ரீமான் ப்ரதான் என்பவர், துரைத்தனத்தார் அநுமதி பெற்று, இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார். "ஊரார் இஷ்டப்படியே" (Local Option) என்ற நியாயமே இதன் அடிப்படை. ஒரு முனிஸிபாலிடியிலோ தாலுகாவிலோ உள்ள மொத்த வோட்டர்களில் நூற்றுக்குப் பத்துப் பேருக்குக் குறையாமல் கலெக்டரை வேண்டிக் கொண்டால், அவர் மதுவிலக்கைப் பற்றி மகாஜனங்கள் அபிப்பிராயத்தை, குறிப்பிட்ட ஒரு தேதியில், வோட்டுக்களின் மூலமாய் அறிவார். அப்பொழுது, ஒரு சிற்றெல்லைக்கு அல்லது தாலுகாவுக்கு ஏற்பட்ட மொத்த வோட்டர்களில் 100க்கு 25 பேருக்குக் குறையாமலும், வோட்டுக் கொடுக்க முன் வந்தவர்களில் 100க்கு 55 பேரும், தாம் குடியிருக்கும் இலாகவில் மதுக்கடைகளே வேண்டாம் என்றேனும், கடைகளைக் குறைக்க வேண்டும் என்றேனும், வோட்டுக் கொடுத்தால், துரைத்தனத்தார் அதன்படி செய்வார்கள்; எனவே, ஊராரிற் செம்பாதியார் இஷ்டப்பட்டால், மதுவிலக்குச் சித்தியாய்விடும். இவ்வித மதுவிலக்கு முறையில் இரண்டு சங்கடங்கள் உண்டு:—(1) ஒரு தாலுகாவிலோ ஜில்லாவிலோ மட்டும் ஊரார் இஷ்டப்படி மதுக்கடைகள் ஒழிந்தும், அடுத்துள்ள தாலுகா ஜில்லாக்களில் கடைகளிருந்தால், திருட்டுத்தனமாய் மது வியாபாரம் நடந்து கொண்டே யிருக்கும் (2) சீமையிலிருந்து வரும் அந்நிய மதுக்கள் (Foreign Liquor) மாகாண கவர்ன்மெண்டார் அதிகாரத்திலில்லை; இந்தியா கவர்ன்மெண்டார்தான் அவைகளை விலக்கலாம்; அன்றியும், ஐரோப்பியர்கள் அவைகளையே குடிக்கின்றனர். இதனால், சாராயம், கள் முதலிய உள்நாட்டு மதுக்களை மாத்திரம் நிறுத்தி, அந்நிய மதுக்களை விலக்காமல் விட்டு விட்டால், இப்பொழுது சாராயமும் கள்ளும் குடிப்பவர்கள் விலை சரசமான சீமைச் சாராயங்களைக் குடிக்கத் தொடங்கி விடுவர்; இப்பொழுதே, இது நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது; இதனால், குடி நில்லாததுமன்றி, நம்ம பணம் பிறநாடுகளுக்குப் போய்விடும். ஆகையால், சீமைச் சாராயங்கள் உட்பட, எல்லா மதுக்களையும் ஒன்றுபோல் பாவித்தே மதுவிலக்கு முறையை அநுஷ்டிக்கவேண்டும்.



# பத்திராபதிர் குறிப்புக்கள்

(92-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

7. மாணுக்கர்களின் சரீரப் பரீக்ஷை:—'உற்ற தறுவாயில் ஒரு தையல், பின்பு ஒன்பது தையல்களை விலக்கும்' என்பதும்; 'வந்த பின் பரிகாரஞ் செய்வதிலும் வருமுன் விலக்குவதே நலம்' என்பதும், ஆங்கிலப் பழமொழிகள். அந்த நியாயப்படி, பள்ளிக் கூடங்களில் கல்வி பயிலும் சிறு பிள்ளைகளின் தேக ஆரோக்கியத்தை அப்போதைக்கப்போது தகுந்த வைத்தியர்களால் பரிசோதித்துப் பார்த்து, காணப்படும் நோய்களையும் நோய் மூலங்களையும் நன்றாக்கியும் தடுத்தும் விலக்கியும் ஏற்றவாறு சிகிச்சை செய்தல், இக்காலத்துக் கல்விப்பயிற்சி முறையில் ஒரு பகுதி யாகும். சென்னை மாகாணத்தில், இதுவரை, இவ்விலக்கு முறை நன்று கையாளப்படவில்லை. துரைத்தனத்தார், இப்பொழுது தான், இதைப்பற்றிச் சில ஏற்பாடுகள் செய்யப் போகின்றனர். நாலணா மாணுக்கனும், நாலணா பள்ளிக் கூடத்தாரும், நாலணா துரைத்தனத்தாருமாக, மொத்தம், ஒரு பையனுக்கு முக்கால் ரூ. வீதம் ஒரு டாக்டருக்குக் கொடுத்து, அவரைக் கொண்டு மாணுக்கர் சரீரப் பரிசோதனை செய்ய உத்தேசமாம். இப்படிச் செய்வதைவிட, பி.ஏ., எம்.பி., பி.எஸ்., என்னும் பரீக்ஷைகளில் தேறிப் பட்டம் பெற்றவர்களில் இரண்டொருத்தரை, ஒவ்வொரு பள்ளிக் கூடத்திலும் நிலையான உபாத்தியாராக ஏற்படுத்திவிட்டால், இந்த வேலை, வெகு திறமாயும் திருப்திகரமாயும் நடக்குமென்று, திருவாங்கூர் மாஜி சுகாதார கமிஷனர் ராவ் பகதூர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி ஐயர் எழுதியிருக்கிறார். இந்த யுக்தி சிலாக்கிய மானதாகப் படுகிறது. ஜன சமூகத்திலே ஒவ்வொருவருக்கும் அத்தியாவசியமான சுகாதார விஷயங்களைப் பற்றிய அறிவையும், சரீர சம்பந்தமான அறிவையும், இந்த மருத்துவ—உபாத்திகள், மாணவருக்குப் புகட்டக் கூடும். சுகாதாரமும் அடிப்படை சாஸ்திர ஞானமும் கட்டாய பாடங்களாயினும், இப்பொழுது இவை நன்றாய்ப் போதிக்கப்படுவ தில்லை. மருத்துத—உபாத்திகள் ஏற்பட்டு விட்டால், சரீர ஆரோக்கியப் பரீக்ஷை செய்வதுடன், இந்தப் பாடங்களையும் செவ்வையாய் நடத்தக் கூடும். துரைத்தனத்தாரும் பள்ளி மானேஜர்களும் கவனித்தற் குரியது இவ் விஷயம். இவ்வித மருத்

துவ—உபாத்திகள், ஒழிந்த நேரங்களில், ஊரிலே வைத்தியமும் செய்து கொள்ளலாம்.

8. பேளலா கோலைக் கேஸ்:—இந்தக் கேஸில் மூவருக்கு மரண தண்டனையும், ஐந்தாறு பேருக்கு ஆயுள் பரியந்தம் தீவாந்தர தண்டனையும் விதிக்கப்பட்டிருக்கிறது. நினைத்துப் பார்த்தால், மனிதனது இழி குணத்தை விளக்குவது, இதனினும் வேறில்லை என்னலாம். காமத்துக்குக் கண்ணில்லை, காமம் பொல்லாது, என்பதை யாவரும் அறிவர். பொல்லாக் காமமே காரணமாய்வரும் இராமாயண கதையிலே, "காம நோய்க்கு மருந்தும் உண்டாங்கொலோ!" என்றும்; "சீலத்தால் அவிவதல்லால் செப்பத்தான் ஆவதுண்டோ!" என்றும், கம்பர் பாடியிருக்கிறார். அந்தக் கல்வியிற் பெரியோரே, ஒரு கைக்களவப் பெண்ணை விழைந்து சோரம் போய் அகப்பட்டுக்கொண்டு, "கைக் களவான குறுந்தடிகொண்டு கழுத்தை நொறுக்க வரும், கைக்களவா! என் தங்கையடா, உன் தாரமடா இவளே" என்று கூறிப் பல்லைக் காட்டிக் கெஞ்சித் தப்பித்துக் கொண்டதாக, ஒரு கதை யுண்டு; அவ்வளவு பொல்லாதது காமம்! ஆயினும், ஒருவன் காமநிமித்தம் மற்றொருவன் உயிரை விடுவதென்றால்,—என்ன சொல்வது? தன் தந்தையின் பொல்லாக் காமத்துக்காக, பீஷ்மர், இராஜ்ய பதவியையும் வாழ்க்கை யின்பத்தையும் துறந்தார். இந்தக் கேஸிலோ, அப்படிப்பட்ட உறவு, கடமை, ஒன்று மில்லை. மனிதரின் மதியீனத்தையும் அகங்காரத்தையுந்தான் என்னென்று சொல்வது! இந்தக் கொலைக் கேஸும், இதில் வெளிவந்தவிஷயங்களும், இந்திய சுதேச ராஜ்யங்களால் இந்தியாவின் முன்னேற்றத்துக்கு ஏற்படும் இடையூறுகளில் ஒரு பகுதியை, நன்கு விளக்குகின்றன.

அ. மாதவையர்.

